கழக வெளியீடு: அசகூ

# தமிழ்ப் புலவர் வரிசை

[பதின்மூன்றும் புத்தகம்]






ஆசிரியர்:

திரு. சு. அ. இராமசாமிப்புலவர்





திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்
திருநெல்வேலி :: சென்னை-1

First Edition: Aug., 1956.

THAMIZHP PULAVAR VARISAI - XIII



*Published by*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.
1/140, BROADWAY, MADRAS-1.

***Head Office*:**

98, EAST CAR STREET, TIRUNELVELI.

Appar Achakam, 2/140, Broadway, Madras-1. C.—1200

# பதிப்புரை



முன்னேற்றத்தை விரும்பும் நாடுகள் எல்லாம், தத்தம் நாட்டுப் புலவர்கள் செய்தருளிய தாய்மொழி நூல்களை விரும்பிப் படித்தலும் படிப்பித்தலும் செய்கின்றன.

அத்துடன், அப்புலவர்கள் வரலாற்றைச் செம்மையுடன் உணர்ந்து அவர்தம் அறிவு, ஆண்மை, அன்பு, ஒழுக்கம், தந்நலமின்மை, தாய்மொழிப்பற்று, எல்லாருக்கும் உதவுதல், விடா உழைப்பு, அஞ்சாமை, வாய்மை, கடமை முதலிய நற்பண்புகளை மேற்கொண்டு நடத்தி நற்பயன் பெறுகின்றன.

அம் முறையில் நம் நாட்டுப் புலவர் பெருமக்கள் வரலாறுகளையும், அவர்கள் செய்தருளிய நூல்களையும் மாணக்கர் இளமையிலேயே கற்று அதன்படி ஒழுகுவது, நாட்டுக்கும், மொழிக்கும் செய்யும் நல்தொண்டாகும் எனக் கருதித் **தமிழ்ப் புலவர் வரிசை**யில் இது காறும் பன்னிரண்டு நூல்கள் வெளியிட்டுள்ளோம். உங்கள் கையில் மலரும் இந்நூல் இவ்வரிசையில் **பதின்மூன்றும் புத்தகமாகும்.**

இதன்கண் **வரந்தருவார்** முதல் **சவராயலு நாயகர்** ஈறுக நூரு புலவர் பெருமக்கள் வரலாறுகளும், ஆங்காங்கு அவ்வப் புலவர் பெருமக்கள் யாத்த பாடல்களும், உள்ளுறை நயங்களுடன் செவ்விய இனிய எளிய நடையில் எழுதப்பெற்றிருக்கின்றன. இதனை எங்கள் விருப்பத்தின்படி ஆக்கித் தந்த **திரு. சு. அ. இராமசாமிப்புலவர்** அவர்களுக்கு எங்கள் நன்றி உரித்தாகுக.

இதனையும் முதல் பன்னிரண்டு புத்தகங்கள் போலவே ஆசிரியர்களும், மாணக்கர்களும், பொதுமக்களும் வாங்கிக் கற்றும் கற்பித்தும் புலவர் பெருமக்களுக்குச் செய்யும் கடப்பாட்டினைச் செய்து எங்களையும் ஊக்குவார்களாக.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# உள்ளுறை

| | | பக்கம் |
|---|---|---|
| க. | வரந்தருவார் | 1 |
| உ. | சம்பந்தமுனிவர் | 4 |
| ௩. | வரதுங்கராம பாண்டியன் | 6 |
| ௪. | அநதாரியப்பர் | 10 |
| ரு | ஆண்டிப்புலவர் | 15 |
| சா. | திருவம்பல தேசிகர் | 16 |
| எ. | தில்லைவிடங்கன் மாரிமுத்துப் பிள்ளை | 21 |
| அ. | கந்தப்ப ஞானதேசிகர் | 23 |
| கூ. | கந்தசாமிப் புலவர் | 30 |
| க0. | சோலைய அடிகள் | 35 |
| கக. | பத்திரகிரியார் | 41 |
| கஉ. | சவாதுப் புலவர் | 46 |
| க௩ | மழவை மகாலிங்கையர் | 49 |
| க௪. | சோமசுந்தர குரு | 55 |
| கரு. | மதுரகவி | 56 |
| கசா. | காஞ்சிபுரம் சபாபதி முதலியார் | 57 |
| கஎ | முத்துச்சாமி ஐயங்கார் | 60 |
| கஅ. | மூத்துராமலிங்க சேதுபதி (க) | 61 |
| ககூ. | கனம் கிருட்டிண ஐயர் | 64 |
| உ0. | முகவூர்க் கந்தசாமிக் கவிராயர் | 70 |
| உக. | வேங்கட்டராயலு நாயுடு | 73 |
| உஉ. | முதுகுளத்தூர் ஆறுமுகம் பிள்ளை | 74 |
| உ௩. | சரவணப் பெருமாட் கவிராயர் (உ) | 76 |
| உ௪ | மகாவைத்தியநாதையர் | 80 |
| உரு. | புலிக்குட்டி இராமலிங்கத் தம்பிரான் | 87 |
| உசா. | சுந்தரதாசப் பாண்டியர் | 91 |
| உஎ. | ச. மு. கந்தசாமிப் பிள்ளை | 97 |
| உஅ. | தாண்டவராயத் தம்பிரான் | 100 |
| உகூ. | தேவராசபிள்ளை | 105 |
| ௩0. | மு. இராமசாமிக் கவிராயர் | 109 |
| ௩க. | வீர. லெ. சின்னையச் செட்டியார் | 120 |
| ௩உ. | இராமசாமி ஐயர் | 123 |
| ௩௩. | தேவிபட்டினம் முத்துசாமிப் பிள்ளை | 128 |
| ௩௪. | கருப்பையாப் பாவலர் | 134 |
| ௩ரு | சவராயலு நாயகர் | 140 |




# தமிழ்ப் புலவர் வரிசை

## [பதின்மூன்றும் புத்தகம்]



### க. வரந்தருவார்

தோற்றம்

"குறும்பியளவாகக் காதைக் குடைந்து தோண்டி, எட்டின மட்டறுப்பதற்கோ வில்லியில்லை" என்று எடுத்துக்கூறப்பெற்ற வில்லிபுத்தூராருக்கு அருமைத் திருமகனாக வரந்தருவார் தோன்றினர்.

கல்வி

இவர் இளமைப் பருவத்தில் தம் தந்தையாரிடமே கல்வியைக் கற்றுக்கொண்டிருந்தார். நுண்மாணுழை புலமிக்கவராக விளங்கியபடியால் படிக்கும்போது தந்தையாரிடமே சொற்போரிடத் தொடங்கினர். இதனல் சினங்கொண்ட வில்லிபுத்தூரார், தம் மைந்தனைப் பார்த்து, "நான் உனக்குக் கல்வி கற்பிக்கமாட்டேன். இல்லத்தை விட்டு யாண்டேனும் செல்க," என்று கூறினர். வரந்தருவார் தந்தையார் கட்டளைப்படி இல்லத்தை விட்டு வெளியே புறப்பட்டார். தகுந்த ஓர் ஆசிரியரையடைந்து அவரிடம் பல ஆண்டுகள் கல்வியை நன்கு கற்றுத் தேறினர்.

**பாரத அரங்கேற்றம்**

வரந்தருவார் கல்வி கற்றுச் சிறந்த புலமையடைந்து ஆசிரியரிடமே தங்கியிருக்கு நாளில் வில்லிபுத்தூரார் பாரதத்தைப் பாடி அரங்கேற்றஞ் செய்யத் தொடங்கினர். அரங்கேற்றம் நிகழும் இடத்திற்கு வரந்தருவார் மாறு கோலம் பூண்டு சென்றிருந்தார். அரங்கேற்றம் தொடங்கியது.

" ஆக்கு மாறய னும்முத லாக்கிய வுலகம்
காக்கு மாறுசெங் கண்ணிறை கருணையங் கடலாம்
வீக்கு மாறர னும்அவை விந்தநாள் மீளப்
பூக்கு மாமுதல் எவனவன் பொன்னடி போற்றி"

என்னுஞ் செய்யுளைக் கூறி வில்லிபுத்தூரார் அரங்கேற்றத்தைத் தொடங்கினர். அவையோர், "பாரதம் விநாயகரால் எழுதப்பட்டது என்பர். ஆகவே அக்கடவுள் வணக்கம் இந்நூலுக்கு இன்றியமையாததாகும். விநாயக வணக்கங் கூறுவிடில் யாம் இதனை ஒப்புக்கொள்ளமாட்டோம்," என்று மறுத்துரையாடத் தொடங்கினர். அரங்கேற்றந் தடைப்படும்போல் தெரிந்தது.

**வரந்தருவார்**

அப்பொழுது அவ்வவையில் மாறு கோலத்துடன் இருந்த வரந்தருவார் எழுந்தார். "இவ்வவையில் பல சமயத்தாருங் கூடியுள்ளபடியால் பிள்ளையார் வணக்கத்தை எந்தையார் வெளிப்படையாகக் கூறவில்லை. மனதிலேயே,

" நீடாழி உலகத்து மறைநாலொ டைந்தென்று நிலைநிற்கவே
வாடாத தவவாய்மை முனிராசன் மாபார தஞ்சொன்ன நாள்
ஏடாக வடமேரு வெற்பாக வங்கூர் எழுத்தாணிதன்
கோடாக எழுதும்பி ரானைப்ப ணிந்தன்பு கூர்வா மரோ"

என்று பிள்ளையார் வணக்கங் கூறியுள்ளார். யான் அவருடைய மகனுகையால் இதனை நன்குணருவேன்," என்றார். வில்லிபுத்தூரார் எழுந்து தம் அருமை மைந்தனைத் தழுவிக்கொண்டார். பின்னர் பாரத அரங்கேற்றம் இனிது நடைபெற்றது.

### இவர் செய்தவை

வரந்தருவார் தனிநூல் செய்ததாகத் தெரியவில்லையாயினும் வில்லிபுத்தூரார் பாடாது விட்ட பாரதத்தின் எஞ்சிய பகுதியை இவர் பாடினர் என்று தெரிகிறது. மேலும் இவர் தம் தந்தையாரால் செய்யப்பட்ட பாரதத்திற்கு இருபத்து மூன்று பாடல்களால் சிறப்புப் பாயிரம் வழங்கினர். வில்லிபாரதத்தின் சிறப்புப்பாயிரம் இவரால் பாடப்பட்டதென்னுஞ் செய்தி,

" இருக்காதி மறைமொழிந்தோன் இயம்பிய இப்
பெருங்கதையை யாருங் கேட்பச்
சுருக்காகப் புராணமுறை சொல்லுகவென்
றலில் அவனுஞ் சொல்ல லுற்றான்
பெருக்காளர் முதலாய பெருங்குலத்தோர்
இக்கதையின் பெற்றி கேட்டார்
செருக்காக அவன்மைந்தன் வரந்தருவான்
இப்பதிகஞ் செப்பி னனே."

என்னுஞ் சிறப்புப்பாயிர இறுதிச் செய்யுளால் பெறப்படும் இப்பாட்டின் நடைசெல்லும் பெருமிதம் முதலியவைகளைக் கொண்டே வரந்தருவாரின் கல்விச் செருக்கு முதலியவைகளை நாம் நன்கு உணர்ந்து கொள்ளலாம்.

———

## உ. சம்பந்த முனிவர்

### தோற்றம்

தென்பாண்டி நாட்டில் அளகாபுரி என்னும் ஊரில் சைவ வணிகர் குலத்தில் சம்பந்தர் தோன்றினர். இளம் பருவத்தில் கற்கவேண்டிய கல்வியைக் கற்றுச் சிறப்புடன் திகழ்ந்தார்.

### துறவு

சம்பந்தருடைய உள்ளம் புலமைக் கல்வியை நாடியது. நிரம்பவழகிய தேசிகர் அந்நாளில் நிரம்பப் புலமை பெற்ற வராகச் சிறந்து திகழ்ந்தார். சம்பந்தர் நிரம்பவழகிய தேசிகரை யடைந்து இலக்கண இலக்கியப் பயிற்சி, சமய நூற்பயிற்சி முதலியவைகளைப் பெற்ருர். இவருடைய உள் ளம் துறவுநிலையை நாடியது. நிரம்பவழகிய தேசிகரிடமே துறவு நிலையையும் பெற்ருர்.

### ஆரூரை அடைதல்

சைவத் துறவை மேற்கொண்ட சம்பந்தர், சம்பந்த முனிவர் என்னும் பெயரைப் பெற்ருர். சிவப்பதிகள் தோறும் இறைவழிபாடு செய்துகொண்டு திருவாரூரை அடைந்தார். பிறக்க வீடு பேறளிக்கும் அவ்வூரிலே பிறக் காமற் போயினும் சிறிது நாள் வாசமாவது செய்து கொண்டு தங்கியிருக்கவேண்டும் என்று எண்ணினர். புற் றிடங் கொண்டாரை வழிபட்டுக்கொண்டு தங்கியிருந்தார்.

### திருவாரூர்ப் புராணம்

திருவாரூரில் வாழ்ந்திருந்த அன்பர்கள் சம்பந்த முனி வருடைய கல்விச் சிறப்பையும் நல்லொழுக்கம் முதலியவை களையும் பார்த்து மகிழ்ச்சியடைந்தார்கள். இவரைக் கொண்டு திருவாரூரின் புராணத்தைப் பாடச் செய்யலாம் என்று எண்ணினர்கள். தங்களுடைய நோக்கத்தைச் சம்

பந்த முனிவருக்குத் தெரியப்படுத்தினர்கள். சம்பந்த முனிவர் அவ்வாறே செய்வதாக வாக்களித்து 2929 பாடல்களால் திருவாரூர்ப் புராணத்தைப் பாடிச் சாலிவாகன சகம் 1514-ல் அரங்கேற்றஞ் செய்தார். இந்நூல் சொற்சுவையும் பொருட்சுவையும் மிக்கதாய்ச் சிறந்து விளங்குகிறது. திருவாரூர் அன்பர்கள் வேண்டுகோளின்படியே இவர் திருவாரூர்ப் புராணத்தை இயற்றி சாலிவாகன சகம் 1514-ல் அரங்கேற்றினர் என்பது,

“ பூமுகை முறுக்கு டைத்துப் பொறியளி மிழற்றுஞ் செய்ய
தாமரை முதல்வ னண்ணச் சங்கநூற் பலகை தாவா
ஏமநல் அறிவின் மிக்கோர் இதயம்போல் இனிதி லங்கும்
காமரு செல்வத் தேவா சிரயனுங் காவணத்தில்

“ஆதிபங் குனிவி ழாவில் ஆரூர்நற் காதை அவ்வூர்
மாதவங் கல்வி மிக்க வைதிக சைவ மேலோர்
ஓதுசீர்த் தலந்தா னத்தோர் உயர்தொண்டர் உடனிருந்து
மூதுயர் தமிழினலே மொழிகென மொழிந்தேன் அன்றே.

“ பார்புகழ் சகாப்தமா யிரத்தைஞ் ஞூற்றுப்
பதினன்கா கியபிங்க லப்பே ராண்டில்
சீர்பரவு பங்குனியுத் திரத்துத் தேவா
சிரயனெனுங் காவணத்தில் தேவர் போற்றும்
கார்பரவு கண்டரா ரூர்ப்பு ராண
கதைநாக ரகண்டங்க ளேவல் லோர்முன்
ஏர்பரவு பேரளகை வணிகர் கோமான்
இசைவளர்சம் பந்தனரங் கேற்றி னனே.”

என்னுஞ் செய்யுட்களால் பெறப்படும்.

## இறுதி

இத்திருவாரூர்ப் புராணத்தைத் தவிர வேறு நூல்கள் இவர் செய்ததாகத் தெரியவில்லை. இவருடைய இறுதி முதலிய கால விவரங்களும் விளக்கமாகவில்லை.

## ௩. வரதுங்கராம பாண்டியன்

### தோற்றம்

வரதுங்கராமர் அதிவீரராமபாண்டியனுடைய தமைய ஞராவார். இவருடைய தந்தையார் பெயர் வீரபாண்டியன் என்று தெரிகிறது. காலம் ஏறக்குறைய நானூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னராம்.

### கல்வி

வரதுங்கராமர் தம்முடைய தம்பியாகிய அதிவீரராம பாண்டியனுடன் இளமையிலேயே ஈசானிய முனிவர் என்ப வரிடம் கல்வியை நன்கு கற்றுத்தேர்ந்தார். இவரும் இவருடைய இளவலும் புவிவேந்தாகவும் கவிவேந்தாகவும் விளங்கினர்கள். அதிவீரராமபாண்டியர் தென்காசியிலும் வரதுங்கராமர் கருவைபம்பதியிலும் தங்கி அரசாட்சி புரிந்துகொண்டிருந்தார்கள்.

### வாழ்க்கை

வரதுங்கராமர் அரசாட்சி நேரம்போக எஞ்சிய நேரங் களில் நூலாராய்ச்சி செய்தல் நூலியற்றல் முதலியவை களிலேயே தமது காலத்தைப்போக்கினர். நைடதத்தினல் இவருக்கும் அதிவீரராம பாண்டியனுக்குஞ் சிறிது பகை யுண்டாயிற்றென்றுங் கூறுவர்.

### மனைவி

வரதுங்க ராமரைப்போலவே அவருடைய மனைவியுங் கல்வியறிவிற் சிறந்து விளங்கினள். வரதுங்கராமரைச் சில திங்கள் பிரிந்திருக்க நேரிட்டபோது,

“ செப்பாரு முகிழ்முகையார் எல்லாருங்
கணவருடன் சேர்ந்து வாழ,
ஒப்பாரும் இல்லாவென் கணவனுடன்
யான்கூடி உறவா டாமல்,

வெப்பாலும் மிகுகாமத் துயராலும்
நாள்தோறும் மெலிந்து வாடி,
இப்பாடு படவென்றே இறையவனென்
தலையோட்டில் எழுதி னானே.

" என்னை அவர் அறமறந்தும் யான்அவரை
மிகநினைந்திங் கிருந்து வாட
முன்னைவினைப் பயன்தானோ அப்பிறப்பில்
செய்ததவம் முடிந்த வாறோ
கன்னன்மதன் அபிராமன் வரதுங்க
ராமன்இயற் காசி நாட்டில்
அன்னவயற் குருகினங்காள் இனியெவ்வா
றுயிர்தரித்திங் காற்று மாறே."

" எண்டிசா முகமுந் திங்கள் இளநிலா வெள்ளங் காயக்
கொண்டமால் பெருகுந்தோறும் கொழுங்கணீற் முகையிற் கோப்பப்
பண்டுநாம் அறியாக் காமத் துயரினால் படுவ தெல்லாம்
வண்டுகாள் உரையீர் உங்கள் வரதுங்க ராம னுக்கே.

என்னும் பாடல்களைக் கூறி வருந்தினாள்.

**பெயர்**

வரதுங்கராம பாண்டியனுக்குப் பெற்றோர்கள் இட்ட பெயர் அபிராம சுந்தரேசுரன் என்பதாம். இப் பெயர் அபிராமன் எனச் சுருக்கமாகவும் வழங்கப்பட்டதாம். அது பாடலுக்குள்ளும் அபிராமன் என்று சேர்ந்துள்ளது.

**அரசவைக் கவிஞர்**

வரதுங்கராமர் புலவராதலின் தமது அவையில் கவிஞர் பலரை வைத்து ஆதரித்தார். காசிக்கலியன் கவிராயர் என்பவர் அவர்கட்குத் தலைவராக இருந்தார். இவர் அரசன் மீது,

" சீர்கொண்ட செங்கமலை வாழத் திரையாடைப்
பார்கொண்ட வாள்வீர பாண்டியனென்—றேர்கொண்ட

கானுலா மாலைக் கனகமகு டம்புனைந்தான்
மானவே லானபிரா மன்."

என்று நாண்மங்கலமும்,

"சேணுலவு வெண்டிங்கள் செல்வனெனத் தண்ணென்று
நீணிலமோ ரேழும் நிழற்றுமே—பேணிவந்து
பூவேந்தர் ஏத்தும் புகழ்வீர பாண்டியனங்
கோவேந்தன் கொற்றக் குடை."

என்று குடைமங்கலமும்,

"பற்றலர்மண் கொள்ளும் பணிந்தார்க் கரசளிக்கும்
கொற்ற முயர்க்குமறங் கூறுமே—விற்றடந்தோள்
வில்லவனை வென்றுகொண்ட வீரமா றன்செழியன்
வல்லமெறிந் தானேந்து வாள்."

என்று வாண்மங்கலமும் பாடியுள்ளார்.

### இவர் இயற்றிய நூல்கள்

பிரமோத்தர காண்டம், திருக்கருவைப் பதிற்றுப்பத் தந்தாதி, திருக்கருவை வெண்பாவந்தாதி, திருக்கருவைக் கலித்துறையந்தாதி, கொக்கோகம் என்பன இவரியற்றிய நூல்கள். இவற்றுள் கொக்கோகம் அதிவீரராம பாண்டியனால் செய்யப்பட்டு இவர் பெயரால் வழங்குகின்றதென்பர். பிரமோத்திரகாண்ட நூலின் முதற்கண்,

"தேசான சிவஞானச் செஞ்சுடரால் மும்மலமாம்
மாசான இருளகற்றி மன்னுயிரைப் புரந்தளித்துத்
தூசானை உரியசைத்தோன் தொல்சமய நிறுத்துநிம்பை
ஈசான முனிவன் இணையடியை இறைஞ்சுவாம்."

என்று குருவணக்கம் கூறியிருத்தலால், இவருக்கு ஆசிரியர் ஈசான தேசிகர் என்பது பெறப்படும். இவருடைய வணக்க நூல்களாகிய அந்தாதிகள் மூன்றும் சொற்சுவையும் பொருட்சுவையும் நன்கு அமையப்பெற்றனவாகவும்

சிவபெருமான் மீது பேரன்பையும் உருக்கத்தையும் உண்டாக்குவனவாகவும் சிறந்து விளங்குகின்றன. பதிற்றுப்பத்தந்தாதியின் கனிவினை நோக்கிய சான்றோர் அதற்குக் குட்டித்திருவாசகம் என்று பெயர் கொடுத்துள்ளனர்.

"உன்னுமம் ஓதி உனையே வணங்கி
　உறுபூசை பேணும் உரவோர்,
பொன்னு டளிக்க வரநல்கு மாதி
　புனிதா களாவில் உறைவோய்!
முன்னே உனக்கியான் அடியேனும் அல்லேன்
　முழுஞானி அல்லன் எளியேன்,
என்னே பிழைத்த பிழைகோடி உள்ள
　எனினும் புரத்தல் கடனே.

"ஒளிமதி முடித்த வேணி ஒருவனே! கருவை யானே!
தெளிவுறு நெஞ்சந் தன்னைத் தெருட்டிநின் னிலையைக் காட்டி
அளியினால் என்னை ஆண்ட அருட்குன்றே! உன்னை யின்னும்
எளியனேன் பிறவி வேட்டோ எத்திடா திருக்கின்றேனே?"

என்பன பதிற்றுப்பத் தந்தாதியில் இரண்டு செய்யுட்கள்.

**பிரமோத்திர காண்டம்**

பிரமோத்திர காண்டம் என்னும் நூல், ஐந்தெழுத்து, திருநீறு, திங்கட்கிழமை; பிரதோடம் ஆகியவைகளின் பெருமையைக் கூறுவது. இருபத்திரண்டு பிரிவுகளையும் ஆயிரத்து முந்நூற்றுப்பத்துப் பாடல்களையும் உடையது. இந்நூல் சைவர்களால் பெரிதுங் கொண்டாடப்படுகிறது.

**இறுதி**

இவர் மூப்பினையடைந்து இறுதிக்காலத்தையடைந்த சமயத்தில் இவருடைய மனைவி இவரைப்பார்த்து, "சாவுக்கு அஞ்சுகிறீர்களோ?" என்று உசாவினாராம். அப்போது இவர்,

"அஞ்சலென்ற கரதலமும் கணபணகங் கணமும்
அரைக்கிசைந்த புலியுடையும் அம்புலிச் செஞ்சடையும்,
கஞ்சமலர்ச் சேவடியும் கனகழலும் சிலம்பும்
கருணைபொழி திருமுகமும் கண்களொரு மூன்றும்,
நஞ்சையுண்ட மணிமிடறும் முந்நூலும் மார்பும்
நலந்திகழ்வெண் ணீற்றொளியும் மறிமானும் மழுவும்,
பஞ்சடிச்சிற் றிடையுமையாள் ஒப்பனைபா கமுமாய்ப்
பால்வண்ணன் உளத்திருக்கப் பயமும்உண் டோ எமக்கே"

என்று பாடினாராம்.

---

## ௪. அநதாரியப்பர்

தோற்றம்

தொண்டைமண்டலத்துள்ள வாயல் என்னும் ஊரிலே அநதாரியப்பர் ஏறக்குறைய முந்நூற்றைம்பது யாண்டுகளுக்குமுன் தோன்றினார். இவர் தொண்டைமண்டலத்தில் தோன்றியவர் என்பது,

"மிண்டரை வெல்லும் வளர்சிங்க ராயன் விலைகொடுப்பத்
தண்டமிழ் மேக முறத்தூரில் வேதியன் தானும்விற்பக்
கொண்டவன் பின்சென்று மண்டலத் தேபுகழ் கொண்டபிரான்
வண்டமிழ்க் கும்பன் அநதாரி யுந்தொண்டை மண்டலமே"

என்னும் தொண்டைமண்டல சதகத்தானும் பெறப்படுகின்றது.

**கல்வி**

அநதாரியப்பர் நன்றாகக் கல்வி கற்க விரும்பினார். பல நாடுகளினுஞ் சுற்றிக்கொண்டு சோழவள நாட்டையடைந்தார். சோழவளநாட்டில் உறத்தூரில் அந்தணர் ஒருவர் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கினார். அந்த அந்தணரிடத்தில் அநதாரியப்பர் கல்வி கற்றுச் சிறப்படைந்தார்.

செய்ந்நன்றி மறவாமல் தாம் அந்த அந்தணருக்கே அடிமையாக அமைந்தொழுகி நின்றார். நாளடைவில் அநதாரியப்பரின் கல்விச் சிறப்பு எல்லா இடங்களினும் பரவியது.

**சிங்கராயன்**

திருவாரூர்க்கு அணிமையில் உள்ள கன்றாப்பூர் என்னும் ஊரிலே அந்நாளில் சிங்கராயன் என்னும் பெயருடைய பெருஞ்செல்வன் ஒருவன் வாழ்ந்திருந்தான். இவனை ஓர் சிற்றரசன் என்றுஞ் செப்புவர். இவன் உறத்தூர் அந்தணரைப் பார்ப்பதற்குச் சென்றான். அங்கு அநதாரியப்பரைக் கண்டான். அநதாரியப்பருடைய கல்விப்பெருமை சிங்கராயனுக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. அநதாரியப்பரைத் தனக்குத் தரவேண்டுமென்றும் தக்கவாறு பொருள் உதவி செய்வதாகவும் அந்தணரிடங் கூறினான். அந்தணரும் அதற்கு இணங்கினார். சிங்கராயன் கொடுத்த பொருளைப் பெற்றுக்கொண்டு அநதாரியப்பரை அவனோடு அனுப்பி விட்டார். இச் செய்தி மேற்கூறிய தொண்டைமண்டல சதகத்துள்ளுங் குறிப்பிடப்பட்டுள்ளது.

**தண்டாயுதனுக்குப் பாட்டு**

அநதாரியப்பர் சிங்கராயனோடு கன்றாப்பூருக்குச் சென்று தங்கியிருந்தார். கல்வித் தொடர்பான செயல்களுக்குச் சிங்கராயன் இவரைப் பயன்படுத்திக்கொண்டிருந்தான். அப்பொழுது கீழக்கடலுக்குப் பக்கத்தில் சுன்னை என்ற ஊரில் தண்டாயுதன் என்னும் பெயருடைய வேளாளச் செல்வன் ஒருவன் வாழ்ந்திருந்தான். அத் தண்டாயுதனுக்கும் சிங்கராயனுக்கும் பகையேற்பட்டிருந்தது. சிங்கராயன் அநதாரியப்பரைக் கொண்டு,

“ திரம்பெறுகன் றாப்புடைய சிங்கப் பெருமான்
உரம்பெறுதண் டாயுதனுக் கோலை—பெரும்பகலே

அந்திவரு நீநினைந்தால் அல்லவென்று லுங்காலம்
பிந்திவரும் முந்திவரும் பேச்சு"

என்னும் வெண்பா ஒன்றை எழுதியனுப்பிவைத்தான். சிங்கராயன் ஆன்பசு ஒன்று கேட்டு இந்தப் பாட்டை எழுதியனுப்பினன். ஆயினும் தண்டாயுதன் பாட்டின் உண்மைக் கருத்தை உணர்ந்துகொண்டான். அவனிடமும் அறிஞர் ஒருவர் நண்பராக இருந்தார். அவரைக்கொண்டு தண்டாயுதன்,

"கனைத்திருந்த கடல்புடைசூழ் கன்னைத்தண்
டாயுதனைக் கன்றூப் புடையான்
நினைத்திருந்த நன்மையினுல் குறைவில்லை
என்றெழுது நிருப ருக்கு
முனைத்திருந்த வாணியயன் அநதாரி
யான்சிவன்தான் முகுந்த னேதான்
உனைத்திருத்த நினைத்திருந்து மடப்புறத்தும்
இத்தனையென் உபாதி தானே"

என்னுஞ் செய்யுளை எழுதியனுப்பினன். இதனைப் பார்த்த பின்னர் சிங்கராயன் அடங்கிவிட்டான். அநதாரியப்பரையும் அவருடைய விருப்பம்போல் செல்லுமாறு விட்டுவிட்டான்.

"நாட்டிற் பொலிய ஆன்பசுஎன் றெழுதுங்கன் றூப்புடைராயன்
சீட்டுக் கவிதை அநதாரி செப்புந் தமிழின் திறனறிந்தோன்
நாட்டிற் புகழ்கன் னைக்குடையா னுந் தண்டா யுதன்பெருமை
வாட்டுப் படுமோ வவன்காணி வளஞ்சேர் சோழ மண்டலமே"

என்பது சோழமண்டல சதகம்.

**சுந்தர பாண்டியம்**

விருப்பம்போற் செல்வதற்குச் சிங்கராயனுடைய உடன்பாடுபெற்ற அநதாரியப்பர் பலவிடங்களினுஞ் சுற்றிக்கொண்டு மதுரையை அடைந்தார். அங்கிருந்த அறிஞர்க

ளோடு அளவளாவி மகிழ்ந்தார். அப்போதங்கிருந்த திரு விருந்தான் என்பவன் மதுரைக்கடவுளாகிய சோமசுந்தரப் பெருமானது திருவிளையாடலைத் தமிழிற் பாடித்தர வேண்டுமென்று வேண்டிக்கொண்டான். சுந்தர பாண்டியம் என்னும் வடமொழித் திருவிளையாடலை அநதாரியப்பர் தமிழில் மொழிபெயர்த்தார். இவர் வடமொழித் திரு விளையாடலைத் தமிழில் மொழிபெயர்த்துப் பாடினர் என் னுஞ் செய்தி,

"மதுரை நாயகன் சுந்தர பாண்டிய வடநூல்
சதிரு லாமணி அறுகாற் பீடத்திற் கல்லூர்
அதிப னுந்திரு விருந்தவன் அவையினில் வாயல்
பதியில் வாழந தாரிசெந் தமிழினில் பகர்ந்தான்.

"ஆய சொக்கர் அருட்கடல் வெள்ளமார்
நேயன் வெண்குடை நீழலில் சேடன்போல்
சேய பார்ச்சுமை செற்றுகந் தாங்கினன்
தூய நெஞ்சினன் நீதி தொடர்ந்துளான்.

"அன்னவன் அரசர் சூழுங்
கச்சிவீ ரப்பன் என்னும்
மன்னவன் அருள்சேர் மன்றைச்
செவ்வந்தி துணைவன் வாய்மைத்
தென்னவன் திருவி ருந்தான்
சவுந்தரன் தேவ பாடைத்
துன்னிருங் கதைதென் னூலால்
சொல்கெனச் சொல்ல லுற்றேன்"

என்னுஞ் செய்யுட்களால் விளங்கும். இத் திருவிளையாடற் புராணத்தைத் தவிர இவர் வேறு நூல் யாதுஞ் செய்த தாகத் தெரியவில்லை.

**புலமைச் சிறப்பு**

அநதாரியப்பர் கல்வியறிவில் தந்நிகரில்லாத் தனிச் சிறப்புப் பெற்று விளங்கினர். இவருடைய புலமைத்திறம்

எல்லோரானும் நன்கு போற்றப்பெற்று விளங்கியது. பிற்காலப்புலவர் ஒருவர் அநதாரியப்பருடைய அறிவுச் சிறப்பைப் பெரிதும் பாராட்டினர். போலிப் புலவர்களுடைய பலவகைப் பெயர்களும் ஆர்ப்பாட்டங்களும் அவருக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. அந்தோ இச் சிற்றறிவாளர்கள் இவ்வாறு தருக்கிக் குதிக்கின்றனரே அநதாரியப்பரைப் போன்ற பெரும் புலவர்கள் இந்நாளில் இருந்தால் இவர்கள் இவ்வாறு துள்ளிக்குதிப்பார்களா என்று எண்ணமிட்டார். அவருடைய உள்ளத்திலே பாட்டொன்று தோன்றியது.

"கம்பனென்றுங் கும்பனென்றுங் காழியொட்டக்கூத்தனென்றும்
கும்பமுனி என்றும்பேர் கொள்வரோ—அம்புவியின்
மன்னு வலர்பரவும் வாயலந தாரியப்பன்
இந்நாளி லேயிருந்தக் கால்"

என்று பாடினர். அந்நாளிலே யிருந்தக்கால் என்று பாடமோதி, கம்பர் அகத்தியர் ஒட்டக்கூத்தர் முதலியோர்கூட அஞ்சி நடந்திருப்பர் என்று கூறுவாருமுளர்.

**இவர் இயற்றிய நூல்**

இவர் இயற்றிய சுந்தர பாண்டியம் வெகுநாள் ஓலைச் சுவடியாக இருந்தது. அந்நாளில் அச்சேற்றும் முறையும் பரவவில்லை யாகையால் அச்சாகவில்லை. நாளடைவில் வேம்பத்தூரார் திருவிளையாடல், பரஞ்சோதி முனிவர் திருவிளையாடல் முதலியவைகளுந் தோன்றவே மறைந்தொழியத் தொடங்கியது. சில பகுதிகள் கறையானுக்கும் இரையாயின. ஆகவே தற்காலத்தில் முழுவதுங் கிடைக்கவில்லை. மதுரைத் தமிழ்ச் சங்கத்தார்க்கு இரண்டாயிரம் பாடல்கள் அடங்கிய ஒரு குறைப்பிரதி அகப்பட்டது. அதனைப் பாதுகாப்பாக வைத்துள்ளனர்.

---

## ரு. ஆண்டிப்புலவர்

### தோற்றம்

இவர் ஏறக்குறைய நானூறு ஆண்டுகட்கு முன்னர் தொண்டை வளநாட்டிலே செஞ்சிக்கு அண்மையில் உள்ள ஊற்றங்கால் என்னும் ஊரிற் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் பாவாடை உபாத்தியாயர். பாவாடை உபாத்தியாயர் கல்வி கேள்விகளிற் சிறந்தவராக விளங்கினர். அவர் அக்கால முறைப்படி பள்ளிக்கூடம் அமைத்து மாணவர் பலருக்குக் கல்வி கற்பித்தார்.

### கல்வி

ஆண்டிப்புலவர் தம்முடைய தந்தையாரிடமே ஐந்திலக்கணங்களையும் ஐயந்திரிபறக் கற்றுணர்ந்து தாமும் தம்முடைய தந்தையாரைப்போலச் சிறந்த புலவரானர். பாக்கள் இயற்றுவதில் இவருக்கு அதிகத்திறமை இயற்கையாகவே அமைந்திருந்தது.

### நூல்கள் இயற்றல்

ஆசிரிய விருத்தப்பாக்களை எளிதாகவும் இனிமையாகவும் பாடத் தொடங்கினர். ஆசிரிய விருத்தத்தினல் 'ஆசிரிய நிகண்டு' என்னும் பெயருடன் நிகண்டு ஒன்று செய்தார். நன்னூற்பொருளை எல்லோரும் எளிதாகவும் விளக்கமாகவும் உணர்ந்து கொள்ளுமாறு, நூற்பாக்களால் அமைந்த நன்னூலை ஆசிரிய விருத்தப் பாக்களால், 'நன்னூலாசிரிய விருத்தம்' என்னும் பெயருடன் பாடினர். தாமியற்றிய நூல்களைத் தம்முடைய மாணவர் பொருட்டே இவர் இயற்றினராதலின் மாணவர்கட்குக் கற்பித்தார். நன்னூலில் வரும், "செம்மை சிறுமை" என்னுஞ் சூத்திரத்தை,

“செம்மையுங் கருமையும் பசுமையும் வெண்மையும்
திண்மையும் நுண்மை யுடனே
சிறுமையும் பெருமையும் குறுமையும் நெடுமையும்
தீமையும் தூய்மையும் அலால்,
வெம்மையும் குளிர்மையும் கொடுமையும் கடுமையும்
மேன்மையும் கீழ்மை யும்பின்
மெய்ம்மையும் வறுமையும் பொய்ம்மையும் வன்மையும்
மென்மையும் நன்மை யுஞ்சொல்
ஐம்மையும் பழமையும் புதுமையும் இனிமையும்
அணிமையும் நிலைமை யுஞ்சேர்
ஆண்மையும் மும்மையும் ஒருமையும் பன்மையும்
அறுமையும் இருமையும் மிக்க
கைம்மையும் கூர்மையும் கேண்மையும் சேண்மையும்
கடிய வளமையும் இளமையும்
காணரிய முதுமையும் பண்புப் பகாப்பதம்
காட்டுமின் னனைய மாதே.”

என்று பாடி யிருக்கிறார். சிறந்து மிளிர்ந்த அறிவாளி யாகிய இவர் மாணவர்கட்குக் கல்வி கற்பித்தல் நூலியற்றல் ஆகியவற்றிலேயே தமது வாணாளைச் செலவிட்டுத் தமிழ்த் தொண்டுபுரிந்தார்.

---

## கூ. திருவம்பல தேசிகர்

**தோற்றம்**

இவர் தருமபுர ஆதீனத்திலே ஆறாவது பட்டத்தில் எழுந்தருளியிருந்த திருஞானசம்பந்த தேசிகர்பால் அருளுரைபெற்று ஏழாவது பட்டத்திலே அமர்ந்திருந்தவர். பெருந்திருவருள் நிறைந்த அருந்தவச் செல்வர். இறைவன் திருவருள் இவரிடம் நன்றாக அமைந்திருந்தது.

**கருப்பத்தில் இருந்த ஆன்மாவுக்குத் தீட்சை**

இவர் ஆதீனத் தலைவராக அமர்ந்து அருட்செங்கோல் செலுத்திக் கொண்டிருக்குங்காலத்தில் மூவலூர் என்னும்

ஊரிலே சுப்பராயச் செட்டியார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிறந்த சிவபக்தி நிறைந்தவர். அவருடைய தாயார் காலமானர். செட்டியார் தம்முடைய தாயாருக்குச் செய்யவேண்டிய இறுதிச் சடங்குகளை யெல்லாம் செய்து முடித்தார். பிறகு திருவம்பல தேசிகர்பால் வந்தார். தேசிகரை வணங்கிப் போற்றினர். தேசிகரைப் பார்த்துத், "தாயினை நற்கதியிற் சேர்ப்பிக்க வேண்டியது சேயினது கடமையாகையால், தேவரீர் திருவருள்செய்து என் தாயாருக்கு வீடு பேற்றினை வழங்கியருளுதல் வேண்டும்," என்று வேண்டிக்கொண்டார். தேசிகர் தமது மெய்யறிவுப் பார்வையினல் செட்டியாருடைய தாயாரின் ஆன்மா எந்நிலையில் உள்ளது என்று பார்த்தார். அது செட்டியாருடைய மனைவியின் கருப்பத்தில் சேர்ந்திருப்பதாகத் தெரிந்தது. செட்டியாரைப் பார்த்து, "உமக்குப் பிள்ளை வேண்டுமா அல்லது தாயார் வீடுபெறுதல் வேண்டுமா?" என்று உசாவினர். "அடியேன் முதலில் விரும்புவது தாயார் வீடுபெறுதலையே," என்று செட்டியார் தெரியப்படுத்தினர். தேசிகர் அவ்வாறே செய்வோம் என்று திருவுளம்பற்றினர். நீராடலை முடித்துக்கொண்டு சொக்கலிங்கப் பெருமானைப் பூசித்தார். அவ்வான்மாவைக் கொணர்ந்து தீட்சை செய்து வீடு பேற்றைக் கொடுத்தார்.

**தஞ்சையரசன் வருகை**

அந்நாளில் தஞ்சையை ஆண்டுகொண்டிருந்த அரசன் கடலாட விரும்பினன். படைகள் புடைசூழக் காவிரிப் பூம் பட்டினம் நோக்கிச் சென்றன். செல்பவன் தருமபுரத்தை யடைந்தான். ஞானபுரீசுரர் திருக்கோயிலில் நள்ளிரவு வழிபாடு நடந்தது. அவ்வழிபாட்டின்போது அடிக்கப்பட்ட மணியொலி அரசனுடைய காதிலே

கேட்டது. அரசன் உடனே தனது ஊர்தியைவிட்டு இறங்கி மனத்தினால் வணங்கினான். பிறகு ஊர்தியிலேறிப் புறப்பட்டான். அப்பொழுது அரசனோடிருந்த பார்ப்பனர் சிலர் அரசனைப் பார்த்து, "இப்பொழுது நீங்கள் வணங்கியது சூத்திரசமாதி. க்ஷத்திரியர்கள் சூத்திரர்களை வணங்குதல் கூடாது. அவ்வாறாக நீங்கள் வணங்கிய படியால் தீவினைக்கு உள்ளானீர்கள். இதன் பொருட்டுக் கழுவாய் செய்துகொள்ளுதல் வேண்டும். மேலும் மற்றையோரும் இத்தகைய குற்றத்திற்கு உள்ளாகாதபடி இக் கோயிலை இடித்துவிடுதலே நன்றாகும்," என்று கூறினர். அரசன் உடனே தன்னுடைய பணியாளர்களை அழைத்தான். கோயிலை இடிக்குமாறு கட்டளையிட்டுவிட்டுத் தான் மேலே செல்லலானான். பணியாளர்கள் கோயிலை இடிக்கத் தொடங்கினார்கள். அடியார் கூட்டம் விரைந்தோடி இச் செய்தியைத் தேசிகருக்குத் தெரியப்படுத்தியது.

**தேசிகர் திருவருளை நாடல்**

தேசிகர் உடனே திருவருளை எண்ணினார்.

"ஈசன் பலகீனன் என்றக்கால் ஆலயத்தின்
மோசம்வந்த தென்று மொழியலாம்—ஈசனே
ஆக்குவதும் ஆக்கி அழிப்பதுவுந் தானானால்
நோக்குவதென் யாம்பிறரை நொந்து."

என்று அடியவர்கட்குக் கூறினார். திருவருட்குறிப்பு உண்டாயிற்று. தேசிகர் இறைவன் திருவருளை வியந்து,

"தேசஞ் சிவாலயங்கள் சேர வலையவொரு
மோசம்வந்த தையோ முதல்வனே—தேசத்து
மன்னைவெறுப் பேனோ வருவினையை ஊட்டுவிக்கும்
உன்னைவெறுப் பேனோ உரை"

என்று விண்ணப்பித்துத் திருவைந்தெழுத்தை யோதினார்.

**திருவருட் செயல்**

இவ்வாறு தேசிகர் திருவாய் மலர்ந்தருளிய அளவில் இருப்புக்கோல் தாக்குமிடந்தோறும் உதிரம் பெருகத் தொடங்கியது. அரசன் பணியாளர்கள் மூர்ச்சையுற்றுக் கீழே வீழ்ந்தனர். நகரத்தின் எல்லையைத் தாண்டிச்சென்ற அரசனுடைய கண்ணொளி மழுங்கியது. அரசன் உடனே கோயிலை இடிக்குமாறு கூறியவர்களைப் பார்த்தான். அவர்கள் ஊமையர்களாகிப் பேசமுடியாமல் திகைத்து நின்றார்கள். அரசன் தன்னுடைய குற்றத்தை உணர்ந்தான். திரும்பித் தருமபுரத்திற்கு வந்தான். தன்னுடைய பணியாளர்களின் நிலைமையைக் கண்டான். மடாலயத்தினுட் சென்று தேசிகர் திருமுன் வீழ்ந்து வணங்கினான். தன்னுடைய குற்றத்தைப் பொறுத்தருள வேண்டும் என்று வேண்டிக் கொண்டான். தேசிகர் "இறைவன் திருவருள் புரிவான்," என்று திருவாய்மலர்ந்தருளினார். அரசனையும் அழைத்துக்கொண்டு திருக்கோயிலுக்குச் சென்றார். அரசன், "இறைவனைக் கண்டு போற்றி வழிபடுவதற்குக் கண்ணொளி இல்லையே எவ்வாறு கண்டு போற்றுவேன்," என்று வருந்தினான். குருஞான சம்பந்தர் திருவருளால் ஒரு கண் நன்றாகத் தெரிந்தது. பணியாளர்கள் கீழே விழுந்துகிடப்பதையும் இருப்புக்கோலால் இடித்த இடங்களில் இருந்து உதிரம் பெருகுவதையும் பார்த்தான். உதிரம் பெருகுதலை நிறுத்தவேண்டும் என்று வேண்டிக்கொண்டான். தேசிகர் திருநீற்றினைத் தூவினார். உதிரம் பெருகுதல் உடனே நின்றது. பணியாளர்களும் எழுந்து தேசிகரை வணங்கினார்கள்.

**மன்னன் பந்தல்**

பிறகு அரசன் காவிரிப்பூம்பட்டினத்திற்குச் சென்று கடலாடித் திரும்பினான். தருமபுரத்திற்குத் தென்கிழக்

குத் திக்கில் கூடாரம் அமைத்துக்கொண்டு தன் உறுதிச் சுற்றத்தினருடன் தங்கித் திருக்கோயில் வழிபாடு செய்து கொண்டிருந்தான். அரசன் தங்கியிருந்த இடம் மன்னன் பந்தல் என்று பெயர்பெற்றது.

**வருணாச்சிரம சந்திரிகை**

அரசன் ஒருநாள் தேசிகரைப்பார்த்துச், "சூத்திரர் களுக்குச் சந்நியாசம் பெற உரிமையில்லையென்று கூறிச் சிலர் அடியேனை மயக்கிவிட்டார்கள். அதன் உண்மை யைத் தெரிவித்தருளவேண்டும்" என்று கூறி வேண்டிக் கொண்டான். தேசிகர் பல எடுத்துக்காட்டுகளால் அரச னுடைய ஐயத்தைப்போக்கி வருணாச்சிரம சந்திரிகை என் னும் நூலை இயற்றியருளினர். சந்நியாசத்தில் அதிகாரம் இல்லையென்று கூறியவர்கள் நாணித் தலைகுனிந்தனர். அரசன் நாற்பத்தைந்து நாட்கள் அங்குத் தங்கி இறைவழி பாடு செய்துகொண்டிருந்தான். குருவருளால் மற்றொரு கண்ணும் நன்றாக விளக்கம் பெற்றது. ஊமைகளாயினா ரும் ஊமை நீங்கப்பெற்றார்கள். மனமகிழ்ச்சியடைந்த அரசன் நள்ளிரவுப்பூசை சிறப்பாக நடைபெறுதற்கு வேண் டிய நிலங்கள் வழங்கி விடைபெற்றுச் சென்றான். தேசிகர் தம்முடைய அடியார்களுள் ஒருவருக்கு அறிவுரை வழங் கித் தலைமைப்பீடத்தில் இருத்தி வீடுபேற்றை யடைந்தார்.

---

## எ. தில்லைவிடங்கன் மாரிமுத்துப்பிள்ளை

**தோற்றம்**

சோழவளநாட்டிலே திருத்தில்லையம்பதிக்கு அண்மையில் உள்ள தில்லைவிடங்கன் என்னும் ஊரிலே இவர் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் தெய்வப்பெருமாள் பிள்ளை.

**கல்வி**

இவர் தக்காரிடம் கல்வியை நன்கு கற்றுச் சிறந்த புலவரானார். மாணவர்கட்குக் கல்வி போதித்தல் நூலியற்றல் இறைவழிபாடு செய்தல் முதலியவைகளிலே தமது காலத்தைப் போக்கினார்.

**நூல்கள்**

சிதம்பரேசர் விறலிவிடு தூது, புலியூர் வெண்பா, அம்பலப்பள்ளி, கோவிந்தப்பள்ளி, ஏசற் பள்ளு, வருணாபுரி ஆதிமூலேசர் குறவஞ்சி, நொண்டி, நடராசர் கீர்த்தனை, பலவித வண்ணங்கள் முதலியவைகளை இவர் இயற்றிருக்கிறார். இவருடைய பாடல்கள் சிலேடை நயம், பொருட்சிறப்பு, அகப்பொருள் நுட்பம் முதலியவைகள் அமையப் பெற்றனவாய்ச் சிறந்து விளங்கும். வெறி விலக்கல் துறைகளாக இவர் இயற்றியுள்ளனவான செய்யுட்கள் மிகுந்த சுவையுடையனவாகும்.

“குவளைமலர் தோறுங் குருகார்வே ளூரில்
பவளவிதழ்ச் செங்கமலப் பாவாய்—இவள்கண்ணோய்
மைபட்டால் தீருமோ வந்து வயித்தினார்
கைபட்டால் தீருநிசங் காண்.”

[குருகு-பறவை. மைபட்டால்-ஆட்டை வெட்டிக் கொன்றால்.]

“மின்னரசி காம வெறிபிடித்தால் உன்னையிந்தச்
சின்ன வெறிபிடிக்கச் செய்ததார்—இன்னவெறி
தீராது தில்லைச் சிவன்வந்து சேர்ந்துமுத்தம்
தாராத நாளளவுந் தான்.

[காம வெறி - காம மயக்கம். சின்ன வெறி - சிறிய ஆடு]

"வெறிபடுபூந் தொங்கலணி வேட்கையாள் ஆசை
மறிபடப்போ காததற்கு மாற்று—நறைபருகி
வண்டார்த்த கொன்றையணி வார்சடைக்கூத் தாடிதான்
கண்டால் தணியுமுய்வள் தான்."

[வெறி - மணம். தொங்கல் - மாலே. மறிபட - ஆடு சாக. நறை - தேன். கூத்தாடி - தில்லேக்கூத்தப்பிரான்.]

புகழ்

இவருடைய கல்வியறிவாற்றல் முதலியவைகளேப் புகழ்ந்து இவர் காலத்தில் இருந்த பாலபாரதியார் என்பவர்,

" தில்லே விடங்கன் தனில்வாழும்
தெய்வப்பெருமாள் திருப்புதல்வன்
தெளிந்த மனத்தன் முத்தமிழோர்
தினமும் புகழுங் குறுமுனிவன்,
முல்லே நகையார் மதன்மாரி
முத்துப்புலமைத் திறம்போல
முயன்ற சுகுணம் அதுபோல
முழுதுந் தெளிந்த மனம்போல,
எல்லே இகந்த பாரதலம்
எழில்வான் தனிலு மேகாண
இதயத் தெண்ணி விழிதுயிலா
திருந்தும் அதுவே நினேவாகி
ஒல்லே அரன்மால் அயன்பிச்சைக்
குழன்றும் பன்றி வடிவெடுத்தும்
ஓங்கிப் பறக்கும் ஓதிமமாய்
உயர்ந்து திரிந்துங் காணுரே."

என்று வியந்து பாடிப் போற்றியுள்ளார்.

இறுதி

இவர் சாலிவாகன சகாப்தம் கஎ௦கூ-ஆம் ஆண்டிற்கு நேரான பிலவங்க ஆண்டு சித்திரைத் திங்கள் கச-ஆம் நாள் இறைவன் திருவடிநீழலே யடைந்தார்.

---

## அ. கந்தப்ப ஞான தேசிகர்

**தோற்றம்**

தொண்டைவள நாட்டிலே இராயவேலூரிலே ஏறக் குறைய இருநூற்று இருபது ஆண்டுகட்குமுன்னர் கந்தப்ப ஞானதேசிகர் தோன்றினார். இவர் திருவண்ணா மலையின் ஈசான்ய பாகத்தில் தங்கியபடியால் பின்னாளில் ஈசான்ய ஞானதேசிகர் என்று கூறப்பெற்றார். தந்தை யார் பெயர் திருநீலகண்டதேசிகர், முருகக்கடவுள் திரு வருளால் தோன்றியமையின் கந்தப்பன் என்று பெயரிடப் பெற்றார். தோன்றிய குலம் வேளாளர் குலம்.

**கல்வி**

கந்தப்பர் தகுந்த பருவத்தில் பள்ளிக்கு அனுப்பப் பெற்றார். திருவருட்செல்வராகத் தோன்றிய இவருக்குக் கலையறிவு இயற்கையாகவே அமைந்திருந்தது. கணக்கா யர் கற்பிப்பதற்கு முன்னரே எல்லாக் கலைகளின் உணர்ச்சி யும் இவருக்கு உண்டாயின. சிறிய இளமைப்பருவத்தி லேயே பெருந்துறவியாக விளங்கினார். வியக்கத்தக்க சில திருவிளையாடல்களையும் இயற்றினார். ஒருமுறை ஒரு வரும் அறியாவண்ணம் மூன்று நாட்கள் மறைந்திருந் தார். திருநீலகண்டதேசிகர் இவருக்கு ஏழாவது அகவை யிலேயே சிவபூசை முறைகளைக் கற்பித்தார். பதினாறு வயதுவரை சிவபூசை செய்துகொண்டிருந்தார்.

**இல்லந்துறத்தல்**

தந்தையார் தம்மைந்தருக்குத் திருமணஞ்செய்து வைக்க எண்ணினார். உறவினர் வீடுகளில் பெண் தேடி னார். கந்தப்பர் தாயாரைப் பார்த்து, "அம்மா! நான் குடும்பியாகமாட்டேன். என் உள்ளம் பற்றற்ற பரம நிலையைப் பற்றி நிற்கின்றது," என்று பகர்ந்தார். தாயார்

மைந்தருடைய விருப்பத்திற்குத் தடையாகக் குறுக்கிட வில்லை. தாயின் உடன்பாட்டைப் பெற்றுக்கொண்டு வீட்டைவிட்டுப் புறப்பட்டார். பல சிவப்பதிகட்குஞ் சென்று இறை வழிபாடு செய்துகொண்டு திருத்தில்லையை அடைந்தார். சில காலந்தங்கிக் கூத்தப்பிரானைப்போற்றி வழிபட்டுக்கொண்டிருந்தார்.

### குருவைக் காண்டல்

கந்தப்பதேசிகர் திருத்தில்லைக்குச் சென்ற காலத்தில் அங்கு மௌன சுவாமிகள் என்னும் பெரியார் ஆயிகுளம் வடகரையில் எழுந்தருளியிருந்தார். அவர் மெய்யறிவு கைவரப்பெற்ற அருந்தவச்செல்வர். மௌன தேசிகரின் பெருமையை உணர்ந்த கந்தப்பதேசிகர் நாளும் போற்றி வழிபட்டுக்கொண்டிருந்தார். அவரிடம் அருளுரை பெற்று மெய்யறிவுப் பெருவாழ்வை மேவ வேண்டும் என்று உள் ளத்தில் துணிந்தார். காலை மாலை இருவேளைகளினும் மௌன தேசிகரைப் போற்றி வழிபட்டுக்கொண்டிருந்தார். சிறிது நாட்கள் சென்றன.

### அருள்பெறுதல்

"நாம் பக்குமடையாதபடியால்தான் இப் பெரியார் நமக்கு அருள் வழங்கவில்லை," என்னும் எண்ணம் கந்தப்ப தேசிகருக்கு ஏற்பட்டது. மனவுறுதி மிகுதிப்பட்டது. தாம் அணிந்திருந்த ஆடைகளை அகற்றிவிட்டுக் கோபீனத் துடன் மௌன தேசிகர்பாற் சென்றார். மார்கழித் திங்கள் பனியுங்குளிரும் மிகுதியாக இருந்தன. அன்று மழையும் பெய்தது. கந்தப்பதேசிகர் எதையும் பொருட் படுத்தாமல் அந்த மழையில் நனைந்துகொண்டே சென்று தேசிகரைப் போற்றினர். மௌன தேசிகர் கந்தப்ப தேசிகர்மீது கடைக்கணேக்கம் செலுத்தியருளினர்.

யாரோ அன்றைக்குத் தம்மீது போர்த்தியிருந்த கம்பளத்தை யெடுத்துக் கந்தப்பதேசிகருக்குப் போர்த்திவிட்டார். அருளுரை வழங்கி அவ்விடமே அமரச்செய்தார். அவ்வளவில் கந்தப்பதேசிகருக்கு மெய்யறிவு உண்டாகி விட்டது. உடனே தம்முடைய குருவின்மீது,

"நித்யபரி பூரண அகண்டசாட் சாத்கார
நிர்மலா நந்த மயமாய்
நிர்க்குண விலாசமாய் வாக்குமனம் அணுகாத
நிர்வாண மோன வடிவாய்ச்,
சத்யஅருள் மேனிகொண் டுலகிலவ தாரமாய்த்
தானெழுந் தருளி வந்து
சமயநிலை யாவையும் ஒருசமன தாகவே
தான்கண்டு மேலா கவே,
முத்திமுத லானநின் அருள்சேர்ந்த அன்பரடி
முடியாக வைத்து நின்னை
மூவுலகு தொழுதில்லை அம்பல நடம்புரியும்
முதல்வனென வேநம்பி னேன்
அத்தியுரி போர்த்தவா மத்தமதி கூவிளம்
அணிந்தவா கங்கா தரா
ஆயிகுளம் மேவிவளர் மோனகுரு நாதனெனும்
ஆனசிவ ஞான குருவே."

என்பது முதலிய ஐந்துபாடல்களைக் குரு வணக்கமாக (பஞ்சரத்தினம் என்னும் பெயரோடு விளங்குவது)ப்பாடிப் போற்றினர். மேலும்,

"திருவளர் சிகராத் திரியிம மலைதன்
செல்விமான் மழுக்கள விடமும்
திகழ்சதுர்ப் புயமும் பாவலோ சனமும்
திரள்சடை யுறைநதி மதியும்,
கருநிறக் களிற்றின் உரிவையும் பணியும்
காந்துயிர்க் கிரங்கியித் தரைக்கண்

கருணையே வடிவாய் மவுனமுத் திரைசேர்
கரசர ணுதிசாங் கமதாய்
இருவினை சமமாய் மலபரி பாகம்
இசைந்தநாள் தன்னில்வந் தெனையாண்
டின்பவீ டளிக்க மென்பதஞ் சூட்டும்
இறைவனே கிருபைவா ரிதியே
மருமலி வனஞ்சூழ்ந் திருளற விளங்கும்
வளர்அருள் தில்லைமா நகரின்
மன்னிவா ழரசே உன்னுமா ரமுதே
மவுனதே சிகசிகா மணியே."

என்பது முதலிய பத்துப்பாடல்களால் சிகாமணிப் பதிகம் ஒன்றும் பாடினர். இச்செய்யுட்களால் இப்பெரியாரின் புலமைத் திறத்தை நாம் ஒருவாறு ஊகித்துணர்ந்து கொள்ளலாம். இவ்வாறு அறிவாசிரியரிடத்தில் அறிவுரை பெற்று மெய்யறிவு கைவரப்பெற்றபின் குருநாதனுடைய இணக்கம் பெற்றுக்கொண்டு தில்லையை விட்டுப் புறப் பட்டார்.

பெரியோர்கள் கூட்டுறவு

தில்லையை விட்டுப் புறப்பட்ட தேசிகர் திருவாரூரை அடைந்தார். தியாகப்பெருமானைப் போற்றி வணங்கினர். அப்போது அங்கு மெய்ஞ்ஞானியாக விளங்கியிருந்த தட்சணுமூர்த்தியடிகள் என்னும் பெரியாரோடு சிலநாள் தங்கியிருந்தார். பிறகு நாகைபட்டினத்திற்குச் சென்றுர். நாகைக்கண்மையில் உள்ள சிக்கலில் உகந்தலிங்கஞான தேசிகர் என்னும் பெரியார் அப்போது அடியார் பலருக்கு அருள்செய்துகொண்டிருத்தலைக் கேள்விப்பட்டார். அப் பெரியாரோடு சிலநாள் தங்கியிருந்தார்.

குகையில் தவம்

பிறகு கந்தப்ப ஞானதேசிகர் தனித்திருந்து தவஞ் செய்யவேண்டும் என்று எண்ணினர். வடதிசையை

நோக்கிச் சென்றார். வேட்டவலம் என்னும் ஊர் திருவண்ணாமலைக்கு அண்மையில் உள்ளது. அவ் வேட்டவலத்திற்கு அண்மையில் உள்ள ஒருமலையின் முழையில் எவரும் உணராவண்ணம் பல ஆண்டுகள் தவஞ் செய்து கொண்டிருந்தார்; அப்போது அவ்வூரிலே முத்துச்சாமி உடையார் என்பவர் வாழ்ந்திருந்தார். அவரிடம் பல மாடுகள் இருந்தன. அவர் தேசிகருக்கு நாள்தோறும் பால் கறந்து கொடுத்துக் கொண்டிருந்தார்.

உதவி விண்போகாது

நாம் மற்றவர்கட்கு உதவிசெய்வோமானால் அவ்வுதவி வீண்போகாது. அவ்வாறாக மெய்யறிவாளர்கட்குச் செய்யும் உதவி வீண்போகுமா? உடையார் ஒரு வீடு கட்டத் தொடங்கினார். நிலத்தைத் தோண்டியபோது புதையல் ஒன்று அகப்பட்டது. அதனால் அவர் பெரும் பணக்காரரானார். ஊரிலுள்ள மற்றவர்கட்குப் பேரவா உண்டாகியது. உடையார் கந்தப்பதேசிகரின் இரசவாத வேலையால் செல்வரானதாக நினைத்தார்கள். தங்களுக்கும் பொருளளிக்கவேண்டுமென்று தொல்லை செய்தார்கள். தேசிகர் தவத்திற்கு ஊரார்கள் தொல்லை முட்டுக் கட்டையாக இருந்தது. தேசிகர் யாருக்குந் தெரியாமல் வேறிடஞ் சென்றார்.

அருணையில் அமர்தல்

பிறகு தேசிகர் அருணையை அடைந்து கோரக்கநாதர் குளக்கரையில் அமர்ந்திருந்தார். அங்கே மாடு மேய்த்துக் கொண்டிருந்தவர்கள் தேசிகருக்குப் பால் முதலிய உணவுப் பொருள்களை அளித்துப் போற்றினர். அங்குத் தங்கியிருந்த போது தேசிகர் தம்மைப் போற்றி வழிபட்டவர்களின் விருப்பங்களை நிறைவேற்றியருளினார். பிறகு அண்ணாமலை

யார்கட்டளைப்படி ஈசான்யதிக்கில் உள்ள குளக்கரைக்குச் சென்று அமர்ந்து தவஞ்செய்து கொண்டிருந்தார். முத்துச் சாமி உடையார் முதலிய அன்பர்கள் அருணையை அடைந்து தேசிகருக்கும் அடியவர்கட்கும் வழிபாடுகள் செய்து சென்றனர். அக் காலத்தில் தேசிகருக்கு அகவை அறுபது ஆகியது.

புலி காவல்

தேசிகர் தவஞ்செய்து கொண்டிருக்கும்போது அவருக்கு எத்தகைய இடையூறும் நேராமல் புலிகள் காவலாகப் படுத்திருக்கும். தேசிகரைக் கண்டு போற்றி வழிபாடு செய்தற்கு வருகிற அடியவர்களையும் புலிகள் யாதுஞ் செய்வதில்லை. காட்டுக்குள் சென்றுவிடுமாறு தேசிகர் கட்டளையிட்டால் கட்டளைப்படியே போய்விட்டுப் பிறகு வரும். இந்தக்காலத்திலும் பல மெய்யன்பர்கள் தேசிகரைப் போற்றி வழிபட்டு நோய் முதலியன நீங்கப் பெறுகிறார்கள்.

ஐடன் துரை

அக்காலத்தில் ஐடன் துரை என்பவர் மாவட்டத் தலைவராக இருந்தார். அவருக்குக் காச நோய் இருந்தது. துரை எவ்வளவோ மருத்துவங்கள் செய்தும் அந் நோயைப் போக்கிக்கொள்ள முடியவில்லை. சில அன்பர்கள் ஞான தேசிகரின் அருட்பெருமையை மாவட்டத்தலைவருக்குக் கூறித் தேசிகரைப் போற்றினால் காசநோய் அகன்று விடும் என்றனர். ஐடன் துரை கந்தப்பதேசிகரைக் கண்டு வணங்கிப் போற்றினார். தமக்குள்ள நோயைப் போக்கியருள வேண்டும் என்று வேண்டிக்கொண்டார். நோய் விரைவில் ஒழிந்தது. அதனால் களிப்படைந்த துரை தேசிகருக்கு

நிலந்தருவதாகச் சொன்னார். தேசிகரோ, "எனக்கு நிலம் வேண்டாம். அதோ அங்கிருக்கும் குடும்பிக்கு எவ்வளவு நிலங் கொடுத்தாலும் தகும்," என்று கூறி அண்ணாமலை யாரைச் சுட்டிக்காட்டினார். தேசிகரை நம்பி ஐடன் துரை ஒருமுறை ஆற்றுவெள்ளத்தில் குதிரையோடு இறங்கி ஆற்றைத் தாண்டி அல்லல் யாதும் இல்லாமல் நல்லபடியாகக் கரையேறிவிட்டார். தேகிகர்பால் மக்கள் பலர் திரண்டு வந்து அறிவுரை பெற்றனர். அவர்களின் பொருட்டு ஞானக்கட்டளை என்னும் நூலை இயற்றி அறிவுறுத்தினார். மற்றுந் தம்மைக் காண வந்த அடியவர்கட் கெல்லாம் அறிவுரை வழங்கினார்.

### சிக்கல் செல்லுதல்

சிக்கலில் எழுந்தருளிய உகந்தலிங்க ஞானதேசிகர் வீடு பேற்றையடையுங்காலம் நெருங்கிவிட்டதென்பதை யுணர்ந்த தேகிகர் உடனே புறப்பட்டுச் சிக்கலுக்குச் சென்றார். இவருடைய வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்த உகந்தலிங்க ஞானதேசிகர் அருணைத் தேசிகனைக் கண்டதும் வீடுபேற்றை யடைந்தார். பிறகு கந்தப்ப ஞானதேசிகர் அருணையை அடைந்து வழக்கம்போல் தங்கியிருந்தார். தாம் வீடுபேற்றை அடையுங் காலத்தை முன்னரே உணர்ந்துகொண்டார்.

### இறுதி

பிறகு ஞானதேசிகர் வடக்கு நோக்கி உட்கார்ந்தபடி நிட்டை செய்து பொறிபுலன்களை அடக்கி (1829-ஆண்டு) விரோதி யாண்டு மார்கழித் திங்கள் இருபத்தாறும் நாள் குருவாரத்தில் மிருக சீரிட விண்மீனில் வீடுபேற்றை அடைந்தார்.

**இவரால் இயற்றப்பெற்ற நூல்கள்**

1. அண்ணுமலையார் தோத்திரப்பாமாலை
2. ஞானக்கட்டளை
3. அண்ணுமலையார் வெண்பா
4. அண்ணுமலை யந்தாதி
5. அண்ணுமலைக் கண்ணி
6. மௌனகுருதேசிகர் சிகாமணிப்பதிகம்
7. மௌனகுருஞான தேசிகர் பஞ்சரத்தினம்

முதலியன இவர் இயற்றிய நூல்கள். தேசிகருடைய சமாதி ஈசானியமடம் என்னும் பெயருடன் இப்பொழுது சிறந்து விளங்குகிறது.

---

## ௧௩. கந்தசாமிப் புலவர்

**தோற்றம்**

பாண்டிவள நாட்டிலே ஈழுவர் குலத்திலே கந்தசாமிப் புலவர் தோன்றினர். அக்காலத்தில் இக்குலத்தினர் ஆடைநெய்து விற்றல், கள் இறக்கி விற்றல் முதலிய தொழில்களை மேற்கொண்டிருந்தனர். கந்தசாமிப் புலவர் இளமைப் பருவத்தில் கல்வியை நன்கு கற்றார். பெரியார் ஒருவரிடம் திருமுருகனுடைய ஆறெழுத்து மறையைப் பெற்று அதனை நாளும் முறையாக உருவேற்றினர். அதனல் முருகப்பெருமானுடைய திருவருள் நாளும் பெருகியது.

**நெய்தல் தொழில்**

வாழ்க்கையை நடத்துதற்குக் கந்தசாமிப் புலவர் யாதேனும் ஒரு தொழிலை மேற்கொள்ள வேண்டியது

இன்றியமையாததாயிற்று. தம்மினத்தாரில் செல்வராக விளங்கிய ஒருவருடைய இல்லத்தில் நெய்தல் தொழிலைச் செய்து அதனாற்பெறும் ஊதியத்தைக்கொண்டு காலந் தள்ளினார். இவர் நெய்தற் தொழிலைப் பார்த்துக்கொண்டிருந்த இல்லத்துச் செல்வரின் அருமைப் பெண் சிறந்த பேரழகியாக விளங்கினாள். அவளுடைய அழகு இவருடைய உள்ளத்தைக் கொள்ளைகொண்டது. மயலால் வருந்திய இவர் அம் மங்கையின் அழகை வியந்து புதிய செய்யுள் ஒன்றைப் பாடினார். அச்செய்யுள் செல்வரின் செவிக்கு எட்டியது. நம்முடைய கூலியாளாகத் தொழில் புரியும் இவன் நம்முடைய மகளை விரும்பினனே என்று அவர் உள்ளம் பொங்கினார். கந்தசாமிப் புலவரைப் பார்த்து, "இனிமேல் நீ என்னுடைய இல்லத்தில் அடியெடுத்து வைத்தல் கூடாது," என்று கூறி இல்லத்தை விட்டு வெளியேற்றினார்.

பொருளும் மருளும்

வெளியேறிய கந்தசாமிப்புலவர் வியக்கத்தக்க பாடல்களை விரைவாகப் பாடலானார். முருகன் திருவருள் பெற்ற இவருடைய வாய்மொழி வாய்மையாகப் பலித்தது. இவன் நம்மீது வசைப்பாடல்களைப் பாடுவானாயின் நமக்கு ஏதம் பலவும் போதருமே யாது செய்வோம். தீது நேராதிருக்க வேண்டுமே என்று செல்வர்கள் பலரும் அஞ்சினர். இவருக்குப் பெரும்பொருள் வழங்கிச் சிறப்புச்செய்து பல்லக்கு முதலிய வரிசைகள் தந்தனர். பரம்பொருளின் அருள்பெற்றால் பெரும்பொருள் குவிதல் அருமையாமோ? முன்பு இவரைத் தன் வீட்டில் இருந்து வெளியேற்றிய செல்வன் இப்பொழுது இவருடைய சிறப்பைப் பார்த்து வியந்தான். இவரைத் தன் மருகனாக்கிக் கொள்ளவேண்டு

மென்று அளவுகடந்த ஆர்வங்கொண்டான். தக்கவாறு வரவேற்றுப் போற்றித் தன் மகளைத் திருமணமுஞ் செய்து கொடுத்தான். புலவர் சிறிதுகாலம் அப் பொற்றொடியோடு இனிது வாழ்ந்திருந்தார். பிறகு பலவிடங்கட்குஞ் சென்று சுற்றத் தொடங்கினர்.

**செந்தின்மா நகருக்குச் செல்லுதல்**

தமக்குப் பேரருள்புரிந்த முருகனைப்போற்றி வழிபட எண்ணினர். பல்லக்கில் புறப்பட்டுச் சென்றார். குருகையூரை ஆழ்வார் திருநகரில் அடைந்தார். அவ்வூரில் வாழ்ந்திருந்த அந்தணர்கள் கந்தசாமிப் புலவருக்கு முன்னால் வந்தனர். அவரைப் பார்த்து, "இவ்வூரில் பல்லக்கில் ஏறி இவ்வாறு செல்லுதல் தகாது. இச்செயல் எங்களையெல்லாம் இழிவு படுத்துவதாகும். எவரும் இவ்வாறு செல்லத் துணியார். நீ உடனே கீழே யிறங்கி இவ்வூர் எல்லை தாண்டுமளவும் நடந்து செல்வாயாக," என்று கூறினர். கந்தசாமிப்புலவர் அந்தணர்களைப் பார்த்து, "முருகனுடைய திருவருளை நான் இனிது பெற்றுள்ளேன். அறுமுகன் அருளைப் பெற்றபின் நான் மனிதனல்லேன். தேவர்களைப் போன்றவன். என்னைத் தடை செய்யாமல் அப்பாற் செல்லுங்கள். செல்லமாட்டீர்களாயின் உங்கள் மீது வசைப்பாடல் பாடித் தீமையை உங்களுக்கு உண்டாக்குவேன். இதனை நன்றாகத் தெரிந்து கொள்ளுங்கள்," என்று கூறினர். இதனைப் புலவர்புராண ஆசிரியர்,

"தடுத்தவர் தம்மைநோக்கிச் சண்முகன் அருட்பேராண்மை
அடுத்தபின் மனிதனல்லேன் அமரரை அனைய னேயான்
விடுத்துய்கின் இன்றேல்அந்தோ வெங்கவி உரைத்து நும்மைக்"
கெடுத்திங்ஙன் செல்வேன் சாட்சிகேட்டெனை உணர்மினென்றான்

என்று உரைத்துள்ளார்.

**அருளை ஆராய்தல்**

இவ்வாறு இயம்பியதைக் கேட்டு அந்தணர்கள் திகைத்தனர். கூட்டத்தில் இருந்த ஒருவன் புலவரின் அருட்டிறத்தை ஆராய்ந்து பார்க்க எண்ணினான். எவரு மறியாதவாறு தெருமண்ணிற் சிறிது அள்ளிக் கையில் இறுக மூடி வைத்துக்கொண்டு புலவரைப் பார்த்து, "இப்பொழுது என்னுடைய கைக்குள் இருப்பது யாது? இதனை ஒரு செய்யுளால் கூறவேண்டும். அவ்வாறு கூறிவிட்டால் பல்லக்கில் செல்லலாம். இன்றேல் உனது பல்லக்கை முறித்துப் பொடிசெய்து விடுவோம்," என்று கூறினன். உடனே கந்தசாமிப் புலவர்,

"கொங்கைக்குச் சந்தனமாங் கோலவிழிக் கஞ்சனமாம்
திங்கள்நுத லுக்குத் திலகமாம்—மங்கையர்நின்(று)
ஆடல் புரிகின்ற ஆழ்வார் திருநகரி
மாடத் திருவீதி மண்."

என்னுஞ் செய்யுளைப் பாடினார். இதனைக் கேட்டவுடன் கைக்குள் மண்ணை வைத்துக்கொண்டிருந்தவன் உடனே தனது கையைத் திறந்து காட்டிவிட்டான். கூட்டத்தினர் மிகுந்த வியப்படைந்தனர். அவர்கள் நாம் இப்புலவன் வாயால் வசைகவிகேட்டுத் தொல்லைக்கு உள்ளாகாமல் தப்பியது சடகோபருடைய திருவருள்தான் என்று எண்ணி மகிழ்ந்துஅப்பாற் சென்றனர்.

**வியத்தகு புதுமை**

பிறகு புலவர் செந்தில்மாநகரை அடைந்தார். கந்தநாதனைப் போற்றி வழிபட்டார். அங்குள்ளவர்கள் இப்புலவருடைய பெருமையை அறிந்து மகிழ்ந்து ஆதரவு செய்து போற்றினர். பிறகு இவர் கடற்கரையில் ஓரிடத்தில் அமர்ந்து முருகன்மீது பல செய்யுட்களைப் பாடினார். பலர் கூடிக் கேட்டுக் கொண்டிருந்தனர். இவர் தமது

வாயில் பாக்கு வெற்றிலை போட்டுக்கொண்டிருந்த படியால் அடிக்கடி பக்கத்தில் எச்சிலைத் துப்பிக்கொண்டே யிருந் தார். இஃதிவ்வாறாக, கருவறையில் (மூலத்தானம்) எழுந் தருளியிருந்த முருகப் பெருமானது ஆடையில் வெற்றிலை பாக்கின் எச்சல் படிந்திருந்தது. பூசை புரிபவன் அதனைப் பார்த்தான். உள்ளந் திடுக்கிட்டான். "அந்தோ நின்மீது இவ்வாறு துணிந்து எச்சிலைத் துப்பியவர் யாவர்? இவ்வாறு செய்யக்கூடியவர்களும் உலகில் உள்ளனரோ?" என்று கூறி வருந்தினன்; அழுதான்; தொழுதான். அப் பொழுது ஒருவன்மீது முருகனது அருள்வெறி வந்தது. அவன் அங்குக் கூடியிருந்தவர்களைப் பார்த்து, "எனது பெயர்கொண்ட புலவன் ஒருவன் என்மீது இனிய செய்யுட் களைப் பாடினன். நான் அப்பொழுது அங்குச்சென்று அவன் பாடுதலைக் கேட்டுக்கொண்டு பக்கத்தில் நின்றிருந் தேன். நான் நின்றிருத்தலை அவன் அறியாமல் எச்சிலை உமிழ்ந்தான். அதனால்தான் அவ்வெச்சில் ஆடைமீது பட்டுவிட்டது," என்று கூறிப் பின் தன் உணர்வு வரப் பெற்றான்.

**நொண்டி நாடகம்**

இவர் அங்குத் தங்கியிருந்தபோது முருகக் கடவுள்மீது 'திருச்செந்தூர் நொண்டி நாடகம்' என்னும் நூல் ஒன்றை இயற்றினர்.

**கேரளஞ் செல்லுதல்**

கந்தசாமிப்புலவர் தம் குடும்பத்தை இனிது நடத்தற் குப் பொருள் விரும்பினர். அதன் பொருட்டுக் கேரளஞ் சென்று வரலாம் என்று எண்ணினர். தமது நோக்கத்தை முருகப் பெருமானிடம் கூறினர். முருகக் கடவுள், "அவ்வாறே செல்வாயாக," என்று இவருடைய கனவில்

தோன்றி உரைத்தருளியதோடு கேரள மன்னரது உள்ளத்திலுந் தோன்றிப் பொருளை விரும்பி என்னுடைய அடியவன் ஒருவன் நின்னிடத்திற்கு வருவான். அவனுக்கு ஐயாயிரம் பொன் வழங்குவாயாக,'' என்று கட்டளையிட்டருளினர். இவர் கேரளஞ் சென்று அரண்மனையை நோக்கிச் சென்றார். இவர் தாழ்ந்த குலத்தினர் என்பதை உணர்ந்த அரசன் சிறிது வெறுப்புடன் இருந்தான். இவர் அரசனுக்குத் தக்கவாறு அறிவுரைகள் கூறி அவனுடைய ஐயத்தையும் அகற்றிப் பொருள்பெற்றுத் திரும்பினர்.

இறுதி

இவர் மற்றும் பல புதுமைகள் செய்துகொண்டு நீண்ட காலம் உலகில் வாழ்ந்திருந்து பிறகு முருகனுடைய திருவடியை அடைந்தார். இவருடைய மகனாகத் தோன்றிய ஆறுமுகப் புலவரும் அறுமுகன் அருட்புலமை நிரம்பப் பெற்றுச் சிறந்து விளங்கினர். கந்தசாமிப் புலவருடைய தனிப்பாடல்களில் ஒரு சிலவற்றைத் தவிர மற்றவை மறைந்து போயின. நொண்டி நாடகம் இருப்பதும், மறைந்ததும் தெரியவில்லை.

---

## க0. சோலைய அடிகள்

தோற்றம்

பாண்டிவள நாட்டிலே பொதியமலைக்கு அண்மையில் உள்ள ஓர் ஊரிலே, நெல்லையில் வடமலையப்பபிள்ளையன் அரசாட்சி செய்துகொண்டிருந்த காலத்தில் சோலைய அடிகள் பிறந்து வளர்ந்து கல்வி கற்றுச் சிறந்து விளங்கினர்.

கல்வி

இவர் இளைஞராக விளங்கிய காலத்தில் ஓர் ஆசிரியரிடம் கல்வி கற்றுக்கொண்டிருந்தார். அவ்வாசிரியர் முது

மைப் பருவத்தில் ஓர் இளம் பெண்ணைத் திருமணஞ் செய்தார். சிலகாலத்தில் அவ்வாசிரியர் இறுதியடையுங்காலம் நெருங்கிவிட்டது.

**ஆசிரியர் கட்டளை**

அவ்வாசிரியர் தம் இளமனைவியின் பிற்கால வாழ்க்கைக்கு யாதும் பொருள் திரட்டி வைத்திலர். அவர் தாம் கூற்றுவன் உலகு குறுகுவது திண்ணம் என்பதை உணர்ந்தவுடன் தம்முடைய அருமை மாணவராக விளங்கிய சோலையரைப் பார்த்து, "அன்புள்ள மாணவனே! நான் என் இளமனைவியை வறிய நிலைமையில் விட்டுவிட்டு மாளும்படியாக நேர்ந்திருக்கிறது. முதுமைப் பருவத்தில் திருமணஞ் செய்துகொண்ட தவற்றினை இப்பொழுதுதான் உணர்கிறேன். உணர்ந்து என்ன செய்வது? நான் உனக்குக் கல்வியை நன்கு கற்பித்திருக்கிறேன். நான் நடத்திவந்த பள்ளிக்கூடத்தை நீ நடத்தலாம். அதற்குத் தக்க அறிவு உனக்கு அமைந்திருக்கிறது. ஆகவே நீ பள்ளிக்கூடத்தை நடத்துவதுடன் என் மனைவியையும் உன் தாயாக மதித்துப் பாதுகாக்கவேண்டும்," என்று கூறினார். சில நாட்களில் மாண்டுபோனார்.

**வீண்பழி**

சோலையர் ஆசிரியர் சொல்லைத் தலைமேற்கொண்டு பள்ளிக்கூடத்தை நடத்தினார். ஆசிரியர் மனைவிக்கு ஆக வேண்டிய உதவிகளையெல்லாஞ் செய்து காப்பாற்றினார். ஊரில் உள்ளவர்கள் சோலையர்மீது தவறான எண்ணங் கொண்டுவிட்டார்கள். அவரைப் பார்த்து, "ஓ சோலையனே! நீ என்ன காரியஞ் செய்யத் துணிந்தனை! உனக்குக் கல்வியைப் போதித்த ஆசிரியனுடைய மனைவியென்று ஒரு சிறிதும் எண்ணிப் பார்க்காமற் போனாய்! இத்தகைய தீய

வழியிலே நீ நடக்கலாமா? இது நரகிலே புகுதற்கு வழி என்று நீ சிறிதும் உணர்ந்துகொள்ளவில்லையா? உடனே இத்தீவினைத் தொழிலை விட்டொழிப்பாயாக,'' என்று எல்லோரும் ஒரே முகமாக உரைத்தனர்.

சோலையர் துறவியாதல்

ஊரினர் உரைத்த வீண்பழிமொழிகளைச் சோலையர் கேட்டார். அவருடைய உள்ளம் எரிந்தது. அவர் உடனே தம் ஆசிரியர் மனைவியைக் கண்டு, "அருமைத் தாயே! உன்னை என்னை ஈன்ற தாயினும் பன்மடங்கு மிகுதியாகப் போற்றிப் பாதுகாக்க வேண்டும் என்று எண்ணினேன். எத்தீவினையோ வந்து அதனைத் தடுத்துவிட்டது. நான் இனிமேல் இவ்வூரில் தங்கியிருக்கமாட்டேன். நீ இறைவன் திருவருளையே துணையாக நம்பியிருப்பாயாக,'' என்று கூறித் துறவுக்கோலம் பூண்டு எல்லாவற்றையும் வெறுத்துச் சென்றுவிட்டார்.

ஊரார்தம் தவற்றினை உணர்தல்

சோலையரது நிலைமையைக் கண்ட ஊரினர் இரங்கினர். நாம் வீண் பதற்றங்கொண்டு குற்றமற்றவன்மீது அடாப் பழியைச் சுமத்திவிட்டோம் என்று உணர்ந்தனர். ஆசிரியன் மனைவியைப் போற்றி வணங்கினுர்கள். "நாங்கள் யாதும் ஆராய்ந்து பாராமல் பழியுரையைப் பகர்ந்துவிட்டோம். எங்கள்மீது சினங்கொள்ளவேண்டாம். உங்கட்கு ஆகவேண்டியவைகளையெல்லாம் நாங்கள் பார்த்துக்கொள்ளுகிறோம்',' என்று சொல்லி வேண்டிக்கொண்டு அவ்வாறே பாதுகாக்கத் தொடங்கினர். துறவியாகச் சென்ற சோலையரோ பலவிடங்களினுந் தங்கித் தவஞ் செய்துகொண்டிருந்தார்.

**வடமலையப்பபிள்ளையன்**

சோலைய அடிகள் தவத்தாற் சிறந்து மெய்ஞ்ஞானியாக விளங்கினர். அவருடைய பெருமை யாண்டும் பரவியது. சோலைய அடிகள் தவத்தால் பெரியவர் என்பதை அந் நாளில் நெல்லையில் இருந்து ஆட்சி புரிந்துகொண்டிருந்த வடமலையப்பபிள்ளையன் உணர்ந்தார். அவர் பூவேந்தராக விளங்கியதன்றிப் பல நூல்களையும் ஆராய்ந்து கல்வி பயின்று பாவேந்தராகவும் விளங்கியிருந்தார். அவரை அடுத்துப் புலவர்கள் பலர் நூலாராய்ச்சி செய்து பொழுது போக்கியிருந்தனர். வடமலையப்பபிள்ளையன் ஒரு நாள் சோலையபரைக் கண்டு பணிந்து வணங்கினர். "அடியே னுக்கு அருளுரை கூறவேண்டும்" என்று பணிந்து வேண் டினர். சோலைய அடிகள் அவ்வாறே அவ்வேந்தனுக்கு அருள் புரிந்தார்.

**குருகையூரில் நடந்தது**

சோலைய அடிகள் தனிப்பாடல்கள் பலவற்றை இயற் றிக்கொண்டு எல்லா இடங்களிலுஞ் சுற்றிக்கொண்டிருந் தார். ஒருநாள் குருகையூரை அடைந்தார். ஓர் அந்தணன் வீட்டுத் திண்ணையில் அமர்ந்து, "சிவசிவா" என்று சொல் லிக்கொண்டிருந்தார். இதனைக் கேட்டதுந் திருமால் அடிய ரான அந்தணனுக்குப் பெருஞ்சினம் மூண்டது. "நீ விரை வாக இவ்விடம் விட்டுப் புறப்பட்டு அப்பால் ஓடிப்போ. என்பு மாலையைப் புனையும் சிவனுடைய அடியவனான உன் னைக் கண்ணுற் பார்த்தாலும் தீவினை வந்து மூளும்," என்று பலவாறு வைது விரட்டினான். அவ்வளவில் சோலைய அடிகளுக்கு மிகுந்த சினம் உண்டாகியது. விரைந்து அவ் வூர்ச் சுடுகாட்டிற்குச் சென்றார். அங்கு இறைந்து கிடந்த எலும்புகளைப் பொறுக்கி மாலையாக அணிந்தார். உடல் முழுதும் திருவெண்ணீற்றைப் பூசினர். ஊமத்தை மாலை,

எருக்குமாலை ஆகியவைகளைப் புனைந்தார். கையில் மண்டை யோடு ஒன்றைத் தாங்கினார்; இவ்வாறு சிவபெருமானைப் போலத் திருக்கோலம் பூண்டு குருகையூருக்குள் நுழைந் தார். அந்தணர் தெருக்களில் நடந்தார். இவரைக் கண்டு சில அந்தணர்கள் அஞ்சியோடினர். சிலர் தமது வீட்டுக் கதவுகளை மூடிக்கொண்டனர். சோலைய அடிகள் அந்த ணர் அஞ்சி நிலைகுலைவதைக் கண்டு அந்த அளவில் விட்டு விடவில்லை. அவ்வூர்க் கோயிலுக்குள் நுழையத் தொடங் கினார். கோயிற் கதவை உடனே அடைத்தனர். சிலர் சோலைய அடிகளைத் தாக்கவும் முற்பட்டனர். ஆனால், அவ் வாறு முற்பட்டவர்களைப் பேய் பூதங்கள் தாக்க முற்பட் டாற்போல ஒரு காட்சி இறைவன் திருவருளால் காணப்பட் டது. அவர்கள் அஞ்சி நீங்கினர்.

**அரசன் வருதல்**

அச்சமயத்தில் வடமலையப்பபிள்ளையன் குருகை யூருக்கு வந்தார். வைணவர் சிலர் அரசனாகிய வடமலை யப்பபிள்ளையனைக்கண்டு சோலைய அடிகளின் திருவிளை யாடல்களைக் கூறினர். உடனே வடமலையப்பபிள்ளையன் சோலைய அடிகளைக் கண்டு வணங்கினார். "அடிகள் ஏன் இவ்வாறு திருவிளையாடல் செய்கின்றது?" என்று உசாவி னார். உடனே சோலைய அடிகள் அரசனைப் பார்த்து, "நான் முற்பிறவியில் இவர்களுடைய சமயத்தில் இருந் தேன். அப்பொழுது இயற்றிய நூல் ஒன்றை இக்கோவி லுக்குள் வைத்திருக்கிறேன். அதனை எடுத்துக்கொண்டு போதல்வேண்டும். அதன்பொருட்டே கோவிலுக்குள் செல்லத் துணிந்தேன்," என்றார். இதனைக் கேட்ட வைண வர்கள் வியப்படைந்தனர். மிகுந்த ஐயங்கொண்டனர்; சோலைய அடிகளைப் பார்த்து, "நீர் கோவிலுக்குட் சென்று அந்நூலை எடுக்காமற் போவீராயின் நாங்கள் எல்லோரும்

இறந்துபோவோம். சொன்னவாறு அந்நூலை எடுப்பீரானால் உம்மைப் பணிந்து உம்மையே இறைவனாகக் கொள்வோம்,'' என்று கூறினர்.

**கோவிலுக்குட்போய் நூல் எடுத்தல்**

சோலைய அடிகள் அரசனையும் அழைத்துக் கொண்டு கோயிலுக்குள் நுழைந்தார். ஒரு பெரிய கருங்கல்லைப் புரட்டினார். அதன்கீழ் ஒரு பெட்டியிருந்தது. அப் பெட்டியில் இருந்து தாம் கூறியநூலை வெளியே எடுத்து எல்லோருக்குங் காட்டினார். இதனைக்கண்டு எல்லோரும் வியப்பில் மூழ்கினர். சோலைய அடிகள் அவ்விடம் விட்டு அகன்று வேறு ஊரை யடைந்தார்.

**சச்சிதாநந்தமாலை**

பலவிடங்களிலுஞ் சுற்றித்திரிந்த அடிகள் தனிப் பாடல்கள்பல இயற்றியதன்றிச் சச்சிதாநந்தமாலை என்னும் பெயருடன் சிறுநூல் ஒன்றும் இயற்றினார்.

**இறுதி**

இப்பெரியாருடைய இறுதியைப் பற்றிப் பலர் பலவாறு அந்நாளில் பகர்ந்தனர். சிலர் சோலைய அடிகளின் உடல் மாயமாகப் போய்விட்டதென்றனர். சிலர் சோலைய அடிகள் அறிதுயிலில் அமர்ந்திருக்கும்போது தீயோர் சிலர் எரிமூட்டி விட்டனரென்றும், உடல் முழுவதும் வெந்துபோனபின் தலைமட்டும் பறந்துபோய் அவருடைய மாணவன் ஒருவன்முன்பு விழுந்ததென்றும், அம்மாணவனுக்குப்பல அறிவுரை வழங்கிச் சச்சிதாநந்த மாலையைக் கூறியதென்றும் உரைக்கலாயினர். இவர் அருட்புலவர்களில் ஒருவராவர். இவ் வரலாறு தண்டபாணியடிகளால் இயற்றப்பெற்ற புலவர்புராணச்செய்தியை அடிப்படையாக வைத்து எழுதப்பட்டது.

---

## கக. பத்திரகிரியார்

### தோற்றம்

பத்திரிகிரியார் துளுவநாட்டிலே உஞ்சேனை மாகாளம் என்னும் நகரிலே பட்டினத்தடிகள் காலத்திலே அரசாட்சி செய்துகொண்டிருந்தார். இவர் கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கினமையின் இவருடைய புகழ் யாண்டும் பரவியது.

### பட்டினத்தடிகள்

பட்டினத்தடிகள் அந்நாளிலே, பல சிவப்பதி கட்கும்போய் இறைவழிபாடுசெய்து கொண்டிருந்தார். உஞ்சேனை மாகாளத்தை அடைந்து இறைவனைப் போற்றி வழிபட்டார். பிறகு நகரை யடுத்த சிறுபுறங் காட்டில் இருந்த ஓர் ஆனைமுகக் கடவுளின் கோயிலில் அமர்ந்து அறிதுயிலில் இருந்தார்.

### கள்ளர்கள்

அந்நாளிற் கள்ளர்கள் பலர் கொள்ளையடித்தற்குப் புறப்பட்டார்கள். பிறகு அவர்கள் எங்கேபோய்க் களவு செய்யலாம் என்று எண்ணினர். பத்திரகிரி மன்னனுடைய அரண்மனைக்குப் போய்க் களவுசெய்வது என்றுமுடிவாகியது. நகரை நெருங்கும்போது காட்டில் இருந்த பிள்ளையார் கோயிலுக்குச் சென்று தங்களுடைய எண்ணம் இனிது நிறைவேறவேண்டும் என்றும், அவ்வாறு நிறைவேறினால் விலைஉயர்ந்த அணிகலன் ஒன்றை வரும்போது செலுத்திவிட்டுப் போவதாகவும் வேண்டிக் கொண்டனர். கள்ளர்கள் எண்ணம் இனிது நிறைவேறியது. கள்ளர்கள் விரும்பியவாறு பொருள்கள் அகப்பட்டன. திரும்பிச்சென்றபோது வேண்டுதலை மறக்காமல் பிள்ளையாருக்கு ஓர் அணிகலத்தை அணிய விரும்பினர்.

ஓர் உயர்ந்த அணிகலத்தை யெடுத்துப் பிள்ளையார் கழுத்திற் போட்டுவிட்டுச் சென்றனர். அஃது அங்கே அறிதுயிலில் இருந்த பட்டினத்தடிகளுடைய திருக் கழுத்தில் விழுந்தது.

## காவலர் தேடிவருதல்

அரண்மனையிற் களவு போனதை மறுநாள் காவலர் உணர்ந்தனர். எல்லா இடங்களிலும் கள்ளர்களைத் தேடினர். சிலர் காலடியை அறிகுறியாகப் பிடித்துக் கொண்டு பிள்ளையார் கோயிலுக்கு வந்தனர். பட்டினத்தடிகளுடைய கழுத்தில் ஓர் அணிகலம் இருப்பதைக் கண்டு அடிகளும் கள்ளர்களில் ஒருவராக இருத்தல் கூடுமென்று எண்ணினர். உண்மையை உரைக்குமாறு வற்புறுத்திப் பலவாறு வருத்தினர். அடிகளாரோ எல்லாவற்றிற்குஞ், "சிவ சிவ" என்று சொல்லிக் கொண்டிருந்தனர். சிலர் விரைந்து சென்று பத்திரகிரி மன்னனைக் கண்டு, "அரசே! கள்வர் தலைவன் காட்டில் அகப்பட்டனன். அவனை யாது செய்வது? அவனைத் தக்கவாறு ஒறுக்காமல் விடின் அரண்மனைப் பொருள்கள் நாள்தோறும் களவு போய்க்கொண்டே யிருக்கும்," என்று உரைத்தனர். ஏவலர் இயம்பியதைக் கேட்ட காவலன், "அக் கள்ளனைக் கழுவில் ஏற்றுக," என்று கட்டளையிட்டனன்.

## கழுமரம் பற்றியெறிதல்

காவலர்கள் அடிகளாரைப் பிடித்துக்கொண்டு போய்க் கழுமரத்திடம் நிறுத்தினர்கள். பட்டினத்தடிகள் எல்லாம் இறைவன் செயல் என்று எண்ணியவராய், "என் செயலாவது" என்னுஞ் செய்யுளைப் பாடினர். அவ்வளவில் கழுமரம் தீப்பற்றி எரிந்துபோய்விட்டது.

**மன்னன் துறவியாதல்**

கழுமரம் தீப்பற்றி எரிந்துபோன புதுமையைக் காவலர் கண்டனர். விரைந்து அரசனிடம் ஓடினர். அரசனைப்பார்த்து, "அரசே! நாங்கள் இந்தப் புதுமையை என்னவென்று இயம்புவோம்? கள்ளர் என்று எண்ணிய அந்த மனிதரைக் கொண்டுவந்து கழுமரத்திடம் நிறுத்திய அளவில் அவர் ஒரு பாடலைப் பாடினர். பாடினவுடனே கழுமரந் தீப்பிடித்து எரிந்துபோய்விட்டது," என்று கூறினர். உடனே பத்திரகிரி மன்னன் எழுந்தான். விரைந்து கழுமரந் தீப்பிடித்த இடத்திற்கு ஓடினன். பட்டினத்தடிகளைப் பார்த்தான். அவர் பெரியமெய்ஞ்ஞானி என்று எளிதில் உணர்ந்தான். "பெரியீர்! நான் நன்ருக உசாவாமல் செய்த இக் குற்றத்தைப் பொறுத்து அடியேனுக்குத் திருவருள் புரிந்து ஆட்கொண்டருளல் வேண்டும்," என்று வேண்டிக்கொண்டான். பட்டினத் தடிகள் கடைக்கணேக்கம் செய்தருளினர். அவ்வளவில் பத்திரகிரி மன்னனுடைய மனந்தெளிவடைந்தது. அரசாட்சியிலும் உலகவாழ்க்கையிலும் மிகுந்த வெறுப்புக் கொண்டான். அப்பொழுதே அரசகோலத்தை நீக்கினன். தம்மைச் சூழ்ந்திருந்த உறுதிச்சுற்றத்தினரையுந் திரும்பிப் பார்க்கவில்லை. அடிகளின் அடிகளில் அடியற்ற பனை யைப்போல் வீழ்ந்தான். அடிகளை உறுதியாகப் பற்றிக் கொண்டு அப்படியே கிடந்தான். பிறகு அடிகள் அரச னுக்கு அருளுரைவழங்கி ஆட்கொண்டருளினர்.

**திருவிடைமருதூர்**

பிறகு பத்திரகிரியாரைப் பார்த்து, "அன்பனே நீ திருவிடை மருதூருக்குச்சென்று ஐயமேற்றுண்டு அவ் விடமே தங்கியிருப்பாயாக," என்று திருவருள்புரிந்தார். பத்திரகிரியார் தம்முடைய ஆசிரியர் கட்டளைப்படி

திருவிடை மருதூரை நோக்கிப் புறப்பட்டார். வழியில் உள்ள பல சிவப்பதிகளிலும் இறைவழிபாடு செய்து கொண்டு திருவிடை மருதூரை யடைந்தார். மேலைக் கோபுர வாசலில் தங்கியிருந்தார். பட்டினத்தடிகளுந் திருவிடை மருதூரை யடைந்து கீழைக்கோபுர வாயிலில் தங்கினர்.

ஒரு நாய்

ஒருநாள் பத்திரகிரியார் பிச்சையேற்றதைக் குருவுக்குப் படைத்து உண்ணத் தொடங்கினர். அப்பொழுது ஒருநாய் அவ்விடத்தை யடைந்து வாலைக்குழைத்து எளிய முகங்காட்டி நின்றது. பத்திரகிரியார் அந்நாய்க்குஞ் சிறிது உணவளித்தார். அஃது அன்றுமுதல் பத்திர கிரியாரைப் பிரியாமல் அவருடனேயே இருந்தது.

இறைவன் காட்சி

ஒருநாள் இறைவன் ஒருதுறவியைப் போல் பட்டினத் தடிகளிடத்திற்கு எழுந்தருளி, "அன்பனே! பசியால் வாடுகிறேன், எனக்குச் சிறிது உணவளிப்பாயா?" என்று உசாவினர். இதனைக்கேட்ட அடிகள், "பெரியீர்! நான் கோவணந்தாங்குவதே பாரம் என்று இருக்கிறேன். உமது பசிக்கு உணவிட எவ்வாறு முடியும்? ஆயினும் ஒன்று சொல்லுகிறேன்; மேலைக்கோபுர வாசலில் குடும்பி ஒருவன் உளன். அவனிடஞ் சென்றால் கட்டாயம் உணவளிப்பான். அங்குப்போம்," என்று கூறினர். துறவிக் கோலத்தில் வந்த இறைவன் உடனே மேலைக் கோபுர வாசலுக்குச் சென்றார். பத்திரகிரியாரைக் கண்டார். பட்டினத்தடிகள் கூறிய செய்தியைக்கூறி, "நீராவது என்னுடைய பசியைப் போக்குவீரா?" என்று உசாவினர். இதனைக் கேட்ட பத்திரகிரியார் தமது

திருவோட்டைக் கையில் எடுத்தார், "பெரியீர்! இந்த நாயும் ஓடும் என்னைக் குடும்பி யாக்கிவிட்டன," என்று கூறி அந்நாயின்மீது ஓட்டை வீசினார். ஓடு நாயின்மேல் வீழ்ந்து உடைந்தது. நாயும் இறந்தது. பிச்சைக்கு வந்த கடவுளும் மறைந்தார். அப்பொழுது பத்திரகிரியார் மெய்ஞ்ஞானப் புலம்பல், அருட்புலம்பல் முதலிய நூல்களைப் பாடியருளினார். பிறகு அறிதுயிலில் அமர்ந்தார்.

வீடு பேறு

இறந்துபோன நாய் வடநாட்டில் ஓர் ஊரில் ஓர் அழகிய பெண்ணாகப் பிறந்து வளர்ந்து மங்கைப் பருவத்தை யடைந்தது. உற்றார் உறவினர் அப்பெண்ணுக்குத் திருமணஞ் செய்து வைத்தற்கு ஏற்பாடு செய்தனர். அப்பெண், "தென்னாட்டில் திருவிடை மருதூர்க் கோயிலில் எழுந்தருளியுள்ள என் ஆசிரியரிடத்திலே கொண்டு போய்ச் சேர்த்து விடுங்கள். நான் திருமணஞ் செய்து கொள்ள மாட்டேன்," என்று கூறி விட்டனள். உற்றார் உறவினர் வியப்படைந்து அப்பெண்ணை அழைத்து வந்து பத்திரகிரியாரிடஞ் சேர்த்தனர். பத்திரகிரியார் அப்பெண்ணை அழைத்துக்கொண்டு பட்டினத்தடிகளின் திருமுன் சென்றார். "குருநாதனது அருட்பொருளை உண்ட நாய்க்கும் பிறவிப்பிணி உண்டாகலாமோ?" என்று கூறிக் கண்ணீர் சொரிந்தார். பட்டினத்தடிகள், "எல்லாம் இறைவன் திருவருள்" என்றார். அவ்விடத்தில் அப்பொழுது ஒரு பேரொளி உண்டாயிற்று. இறைவன் திருவருள் நோக்கப்படி பத்திரகிரியார் அப்பெண்ணோடு அப்பேரொளியிற் புகுந்து மறைந்தார். (இவர் வரலாறு புலவர்புராணம் உடையாரால் வேறுவகையாகவும் கூறப் பெறுகிறது.)

---

## கஉ. சவாதுப் புலவர்

தோற்றம்

பாண்டிவளநாட்டில் பரம்பைக்குடிக்கு அடுத்த எமனேசுவரம் என்னும் ஊரிலே முகமதியர் குலத்திலே சவாதுப் புலவர் பிறந்தார். தமிழ்க் கல்வியைக் கருத்துடன் சிறப்பாகக் கற்றுப் புலமைபெற்று இராமநாதபுரம் சமத்தானப் புலவராக இருந்தார். இவர் காலத்தில் இரகுநாத சேதுபதி என்பவர் அங்கு ஆட்சிபுரிந்துகொண்டிருந்தார். சவாதுப்புலவரின் திறமை தனிச் சிறப்புடையதாக விளங்கியது.

பரிசில் வாழ்க்கை

இவர் சேதுபதியின் அவைக்களப் புலவராக அமர்ந்திருந்ததோடு சமயங் கிடைத்தபோதெல்லாம் பிற சமத்தானங்கட்குஞ் சென்று தமது புலமையைக் காட்டிப் பரிசுகள் பெற்று வந்தார். திருவனந்தபுரத்திற்குச் சென்றிருந்தபோது திருவனந்தபுர அரசர் இவரைப் பார்த்து "உங்களுடைய சேதுபதி எத்தன்மையுடையவர்?" என்று உசாவினார். இவர் உடனே,

"இளையாளன் சேது பதிரகு நாயகன் இஞ்சுகவாய்
இளையார் கலவி யிடத்துநம் மீசர் இடத்துமன்றி
வளையாத பொன்முடி சற்றே வளையு மகுடமன்னர்
தளையா டியகையில் காளாஞ்சி யேந்துஞ் சமயத்துமே"

என்று பாடினார். இதனைக் கேட்ட திருவனந்தபுரவரசர் நகைத்து, "உங்கள் அரசர் இவ்வளவு பெரிய வணங்காமுடி மன்னரா?" என்றார். பிறகு தக்கவாறு நன்கொடைகள் வழங்கியனுப்பினர்.

புதுக்கோட்டை அரசர் அவைக்கு ஒருமுறை சென்றார். அப்பொழுது அங்கு அரசராக இருந்தவர் நன்கு கல்வி

கற்றவர். ஆயினும் புலவர்களைக் கண்டு அவர்களுடைய குறையைக் கேட்டுத் தக்கவாறு பரிசில் வழங்கிப் போற்றாமல் இருந்தார். இதனைச் சுட்டிக்காட்டி அரசருக்கு அறிவுறுத்தவேண்டும் என்று எண்ணிய இப்புலவர் சிறிதும் தயங்காமல்,

"காயாத பாலுமில்லை பாயாத புலியுமில்லை
கற்றோர் வந்தால்
ஆயாத வேந்தரில்லை மடிகனத்தால் வழிபயமுண்
டாகுங் கண்டாய்
சாயாத முடிவேந்த ரகுநாத தொண்டமான்
சாற்றக் கேண்மோ
நீயாதி சேடனைப்பாய் கற்றிருந்துங் கேள்வியிலை
நிசஞ்சொன் னேமே"

என்று பாடினார். புதுவை ஆநந்தரங்கப் பிள்ளையிடஞ் சென்று அவர்மீதுஞ் செய்யுட்கள் பாடிப் பரிசு பெற்றார்.

**சந்திரசேகரவண்ணம்**

அந்நாளில் சந்திரசேகர பிள்ளை என்பவர் பெருஞ் செல்வராக விளங்கியிருந்தார். இவர் அவர்மீது வண்ணம் ஒன்று பாடினார் அச் செய்தியைப் பின்வருஞ் செய்யுளால் மேற்படி சந்திரசேகர பிள்ளைக்குத் தெரியப்படுத்தினார்.

"விருதிலக் கணகா வியப்ரசங் கத்தின்மனு
வேந்தர்கள் சபாரஞ்சித
வித்வசே கரன்கண்ட மூதண்டம் வென்றமா
வெகுவித்தை யாடம்பரன்,
கருதியெதி ரிடுபுலவர் தர்க்கமிடு வாயிலே
கவியாப் பிணைக்கடாவும்
காலமா ருதமதுர கவிசொரி சவாதுவளர்
கவிராச சரபநிருபம்
தருவிதவி ரணவிரு திலக்கண சுலக்கணம்
தாங்குகை லாசன்மகவே

தந்த்ரசே கரவருண சந்த்ரசே கரமதா
சலமகா முனிவயாமும்
இருநிலம் புகழ்வண்ணம் என்றஒரு பிரபந்தம்
இசையினூற் படிபாடினேம்
இருநூறு பொன்னொரு முடிப்பாக வேகபரிந்
திக்கணம் அனுப்புவாயே."

தற்புகழ்ச்சி

தன் பெருமையை அறியாதவர்களிடத்திலே தம்மைப் புகழ்தலும் புலவர்கட்குத் தகும் என்றனர் பெரியோர். இவர் தமது கல்விச் சிறப்பைக், "கவி மதங்கொண்டிடுசவாதுக் கவிச் சரப காம்பீர்ய துங்கன்" என்றும் வேறு பல வகையாகவும் அமைத்துப் பாடியுள்ளார்.

"சொல்லக் கணக்கவிதை சூட்டுவோர் நாவலரை
வெல்லக் கணக்கவிதை வீசுவோம்—நல்ல
தனிச்சவா துப்புலவன் சாற்றுகவி எல்லாம்
இனிச்சவா துப்புதுமை யே."

என்பதும் இவருடைய பாடல்தான். வேறொரு புலவர் இவரைப் பாராட்டி,

"வெண்டா மரையனந்தன் வேறுருக்கொண் டுற்றனளோ
தண்டா மரையனந்தன் தானிவனே—வண்டமிழின்
எண்ணே எழுத்தோ இசையோ இயற்புலவர்
கண்ணேச வாதுக் கவி"

என்று பாடியுள்ளார்.

இராசராசேசுவரி பஞ்சரத்தினம்

ஒருமுறை சேதுபதி வைசூரி கண்டு வருந்தினர். அப்பொழுது இவர் அம்பிகைமீது, 'இராசராசேசுவரி பஞ்சரத்தினம்' என்னும் பெயரோடு ஐந்து பாடல்களைப் பாடினர்.

வைசூரி நோய் விரைவில் நீங்கி உடல்நலம் ஏற்பட்டது. அதனால் மகிழ்ச்சி யடைந்த சேதுமன்னர் சுவாத்தன் என்னும் விளைபுலவூரை முற்றூட்டாக வழங்கினார். முகைதீன் ஆண்டவர் பிள்ளைத் தமிழ் என்னும் நூலும் இவரால் இயற்றப்பட்டது.

---

## கரு. மழவை மகாலிங்கையர்

### தோற்றம்

மதுரைக்குக் கிழக்கேயுள்ள மழவராயனேந்தல் என்னும் ஊரிலே மகாலிங்கையர் ஏறக்குறைய நூற்றைம்பது யாண்டுகட்கு முன்பு தோன்றினார். மழவராயனேந்தல் என்னும் பெயர் மழவை என்று மருவி வழங்கும். இவர் பிறவூர்களிற் சென்று தங்கியபடியால் இவரை அவ்வூரினர் மழவை என்னும் ஊர்ப்பெயரோடு சேர்த்து மழவை மகாலிங்கையர் என்று வழங்கலாயினர். குலம் ஆதிசைவ குலம்.

### கல்வி

இவர் பள்ளிக்கல்வியை நன்கு கற்றுத் தேர்ந்தபின் மதுரை யடைந்து அங்கிருந்த அறிஞர்கள் சிலர்பால் இலக்கண இலக்கியங்களைப் பயின்றார். பிறகு சென்னையை அடைந்து அங்கிருந்த பெரும் புலவர்கள் சிலரிடமும் திருத்தணிகை விசாகப் பெருமாள் ஐயர், சரவணப் பெருமாள் ஐயர் ஆகியவர்களிடமும் இராமாயணம், திருத்தணிகைப் புராணம் முதலியவைகளை இரண்டோராண்டு நன்கு பயின்றார். நுண்ணுணர்வை இயற்கையாகவே பெற்றிருந்த இவர் சிறந்த அறிஞராவதற்கு அதிகக் காலம் பிடிக்கவில்லை.

### ஆசிரியத் தொழில்

சிறந்த அறிஞராக இவர் ஆனவுடன் இவருடைய பேரும் புகழும் யாண்டும் பரவலாயின. பலர் இவரிடம்

இலக்கண இலக்கியங்களைப் பாடங் கேட்கத் தொடங்கினர். சென்னைக் கல்லூரியின் தலைவர்கள் இவரைத் தமது பள்ளியில் ஆசிரியராக அமரும்படி வேண்டினர். இவரும் அவ்வாறே ஒரு கல்லூரியில் அமர்ந்து ஆசிரியராகத் தொழில் புரிந்ததோடு இல்லத்திலும் பலருக்குக் கல்வி கற்பித்தார். நூல்கள் எழுதுவதிலும் ஈடுபட்டார். இவருக்கு இலக்கண அறிவு நன்கு அமைந்திருந்தது. இலக்கணச் சுருக்கம் ஒன்றும் இவர் எழுதி வெளிப்படுத்தினர்.

### இராமாநுச கவிராயர்

பெரும் புலவர்களில் இராமாநுசகவிராயரும் ஒருவர். நன்னூலுக்கு இவரும் ஓர் உரை எழுதியுள்ளார். மகாலிங்க ஐயருடைய ஆசிரியர்களான சரவணப் பெருமாள் ஐயருக்கும் விசாகப் பெருமாள் ஐயருக்கும் ஆசிரியர் இவரே. நாளடைவில் சரவணப் பெருமாள் ஐயருடைய புகழும் விசாகப் பெருமாளையருடைய புகழும் யாண்டும் மிகுதியாகப் பரவியது. எக்காரணத்தினலோ இராமாநுச கவிராயருக்குத் தம் மாணவர்களாகிய மேற்கூறிய ஐயர்கள் இருவரிடத்திலும் அழுக்காறுண்டாயிற்று. "அழுக்காறெனை ஒருபாவி திருச்செற்றுத் தீயுழி உய்த்துவிடும்," என்னும் குறளை இராமாநுச கவிராயர் ஒரு பொருட்படுத்தாமல் பலபேரிடமும் மேற்படி இருவரையும் இழித்துரைத்துக்கொண்டு திரிந்தார். சிலர் மகாலிங்கையரை யடுத்து இராமாநுச கவிராயரை எவ்வாறுவது அடக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். மகாலிங்கையர் அதற்கு இணங்கினர். இராமாநுச கவிராயரை எந்தவிடத்தில் எவ்வளவு கூட்டத்தில் கண்டாலும் மிகக் கடினமான கேள்விகளைக் கேட்டுத் திணறச் செய்தார். இதனல் இராமாநுச கவிராயர் நாளடைவில் அடங்கிவிட்டார்.

**ஐயரும் பிள்ளையும்**

திருவாவடுதுறையாதீனப் புலவராக விளங்கிய பெரும் புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை சென்னைக்குச் சென்றார். மகாலிங்கையரைப்பற்றிப் பலர் மூலமாகக் கேள்விப்பட்டிருந்தபடியால் ஐயரைப் பார்க்க விரும்பினார். காஞ்சிபுரம் பெரும்புலவர் சபாபதி முதலியாரை அழைத்துக்கொண்டு ஐயருடைய வீட்டிற்குச் சென்றார். அங்கு வேறு பல புலவர்களும் இருந்தனர். ஐயர் முதலியாரையும் பிள்ளையையும் வரவேற்றார். முதலியாரோடு உரையாடிக்கொண்டிருந்தார். அப்போது மீனாட்சிசுந்தரம்பிள்ளை இளைஞர். ஆகவே அடக்க ஒடுக்கமாக ஒரு பக்கத்தில் அமர்ந்திருந்தார். மகாலிங்கையர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையைச் சுட்டிக்காட்டி, "இவர் யார்?" என்று சபாபதி முதலியாரைப் பார்த்துக் கேட்டார்.

முதலியார் ஐயரைப் பார்த்து, "இவருடைய ஊர் திரிசிரபுரம். பெயர் மீனாட்சிசுந்தரம்பிள்ளை. இலக்கண இலக்கியங்களை நன்கு பயின்றிருக்கிறார். செய்யுளும் செய்வார். சிலவேலைகளை முன்னிட்டுப் பட்டினத்துக்கு வந்திருக்கிறார். தங்களைப் பார்க்கவேண்டுமென்று விரும்பினார். அழைத்துக்கொண்டு வந்தேன்," என்று கூறினார்.

ஐயர் பிள்ளையைப் பார்த்து, "என்ன என்ன நூல்கள் படித்திருக்கிறீர்?" என்று கேட்டார். மீனாட்சிசுந்தரம் பிள்ளை தாம் படித்த நூல்களைச் சொன்னார். பிறகு ஐயர் "ஏதாவதொரு பாடல் சொல்லும்" என்று சொன்னார். உடனே மீனாட்சிசுந்தரம் பிள்ளை, தாம் இயற்றிய அகிலாண்ட நாயகி பிள்ளைத்தமிழில் இருந்து,

" இரசத வரையமர் பவள விலங்கல்
இடம்படர் பைங் கொடியே
இமையவர் மகிழ்வொடு புகழுஞ் சிமயத்
திமயம் வரும்பிடியே,
சரணினை பவருட் டிமிரம் சிதறச்
சாரும் இளங்கதிரே
சதுமறையாலும் அளப்பரி தான
தயங்கு பொலாமணியே
மரகத வரையிள கியவெழில் எனவெழில்
வாய்த்த செழுஞ்சுடரே
மதுரித நவரசம் ஒழுகக் கனியும்
வளத்த நறுங்கனியே
தரணி மிசைப்பொலி தருமக் குயிலே
தாலோ தாலேலோ
தழையுந் தந்தி வனத்தமர் மயிலே
தாலோ தாலேலோ."

என்னுஞ் செய்யுளைச் சொன்னார். இதனைக் கேட்ட ஐயர், "பாடல் மிக அருமையாக இருக்கிறது. இஃது ஒரு பிள்ளைத் தமிழின் தாலப்பருவப் பாடலன்றோ? இப்பிள்ளைத் தமிழின் பெயர் என்ன? இதனை இயற்றிய ஆசிரியர் யாவர்? இப்பிள்ளைத் தமிழ் இப்பக்கங்களில் வழக்கமில்லை" என்று கூறினார். இதனைக் கேட்ட மீனாட்சிசுந்தரம் பிள்ளை, "இப் பாடல் அடியேன் இயற்றிய அகிலாண்டநாயகி பிள்ளைத் தமிழில் உள்ளது" என்று சொன்னார். இம்மறுமொழியைக் கேட்ட மகாலிங்கையர் மிகுந்த வியப்படைந்தார். இவ்வளவு அருமையான செய்யுள் அமைந்த பிள்ளைத்தமிழைப் பாடியவர் எவ்வளவோ நூல்களைப் படித்திருக்க வேண்டுமே. இத்தகைய நூலைச் செய்தவர் இவ்வளவு அடக்கமாக அமைந்திருப்பது வியப்பாக இருக்கிறதே. "அறிவோர்க்கழகு கற்றுணர்ந்தடங்கல்" என்று பெரியோர்கள் கூறியிருப்பது இவரிடம் நன்றாக விளங்குகிறது. அரை

குறைக் கல்விதான் ஆர்ப்பாட்டத்தைச் செய்யும். நிரம்பிய கல்வி இவ்வாறுதான் இருக்கும். குறைகுடங் கூத்தாடுமே தவிர நிறைகுடம் அமைதியாகத்தான் இருக்கும். இவரிடம் இன்று நான் இதனை நன்ருக உணர்ந்துகொண்டேன்,'' என்ருர். பிறகு பிள்ளைத்தமிழில் இருந்து மேலும் பல பாடல்களைச் சொல்லக் கேட்டு மகிழ்ந்தார். பிறகு மீனுட்சிசுந்தரம் பிள்ளையைப் பார்த்து, "நான் ஒரு பாடல் சொல்லுகிறேன் கேட்கவேண்டும்,'' என்று கூறிவிட்டு,

" தருமைவளர் குமரகுரு முனிவன் கல்வி
சார்பகழிக் கூத்தனெனத் தரணி யோர்சொல்
இருவருமே நன்குபிள்ளைத் தமிழைச் செய்தற்
கேற்றவரென் றிடுமுரைவெங் நிட்ட தம்மா
அருமைபெறு காவையகி லாண்ட வல்லி
அம்மைமேல் மேற்படிநற் றமிழை யாய்ந்து
சுருதிநெறி தவருத குணன்மீ ஞட்சி
சுந்தரமால் அன்பினெடு சொல்லும் போதே.''

என்னுஞ் செய்யுளைக் கூறினர். "தாங்கள் பாடியுள்ள இப் பிள்ளைத்தமிழைக் கட்டாயம் அச்சியற்றி வெளியிடவேண்டும்'' என்று கூறினர். மேலும், "தாங்கள் சென்னையில் இருக்கும் வரையில் என்னுடனேயே தங்கியிருத்தல் வேண்டும்; தங்கட்கு ஆகவேண்டிய எச்செயலையும் நான் செய்து முடிக்கிறேன். தங்களோடு பழகுவது எனக்கு மிகுந்த இன்பத்தை விளைவிக்கிறது,'' என்ருர். மீனுட்சிசுந்தரம் பிள்ளை பிறகு சென்னையில் இருந்தவரையில் மகாலிங்கையருடனேயே தங்கியிருந்தார். தமக்கு நன்னூல் விருத்தியுரை, யாப்பருங்கலக்காரிகை உரை, தண்டியலங்கார உரை, நம்பியகப்பொருளுரை முதலிய இலக்கண நூல்களினும் பிற நூல்களினும் இருந்த ஐயங்களைக் கேட்டுப் போக்கிக் கொண்டார். இலக்கணக் கொத்துரையை ஐயரிடம் பாடங் கேட்டார். பிறகு இருவரும் ஒன்ருகத் தங்கியிருந்தனர்.

மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் ஐயரால் தெரிந்து கொண்ட செய்திகள் பல.

### பிரிவுத் துயர்

திருவாவடுதுறை ஆதீனப்புலவர் தாண்டவராய அடிகள் சென்னையில் இருந்தபோது ஐயரும் அடிகளும் நெருங்கிப் பழகினார்கள். அடிகளார் திருவாவடுதுறைக்குச் சென்றுவிட்டபின் ஐயரவர்கட்கு மிகுந்த வருத்தமுண்டாகியது.

"விரிந்தமக ராலயத்து மின்னாளுக் கணியாகி
மேம்பா டுற்றுப்
பரிந்த சிவ யோகியர்வாழ் துறைசையுளாய் இருகலையின்
பண்பை நன்கு
தெரிந்ததாண் டவராய மாதவசித் தாந்தமுணர்
செல்வா நின்னைப்
பிரிந்ததனால் மணியிழந்த கண்ணதுபோல் வாடுகின்றேன்
பேதை யேனே.''

என்னுஞ் செய்யுளை எழுதியனுப்பினார்.

### இயற்றிய நூல்கள்

இலக்கணச் சுருக்கம், பஞ்சதந்திர வசனம் முதலிய பல நூல்கள் மகாலிங்கையரால் செய்யப்பட்டன. பிறவற்றின் பெயர் விளக்கமாகவில்லை. இவர் இயற்றிய நூல்களிற் சில இவராலும் சில இவருடைய மாணவர்களாலும் அச்சிடப்பட்டு வெளியில் வந்துள்ளன.

### இறுதி

பெரும்புகழ் வாய்ந்திருந்த இவர் காலமான ஆண்டு முதலியன விளக்கமாகத் தெரியவில்லை.

---

## கசு. சோமசுந்தர குரு

### தோற்றம்

இவர் சேதுநாட்டிலே இராமநாதபுரத்திலே தோன்றி னர். இவருடைய தந்தையார் பெயர் நெல்லையப்ப பிள்ளை. வேதாந்த சூடாமணியுரைக்குப் பாயிரஞ் செய்த சாமிநாத பிள்ளை யென்பவர் சோமசுந்தரம்பிள்ளையின் உடன்பிறந்தவ ராவர்.

### கல்வி

இவர் காலத்திலே திருவாவடுதுறை யாதீனத்திலே மாதவச் சிவஞான யோகிகள் விளங்கியிருந்தார். இவர் அங்குச் சென்று அவரிடங் கல்வி கற்றுப் பெருஞ்சிறப் புடன் இராமநாதபுரத்திற்குத் திரும்பினர்.

### மாணவர்கள்

சோமசுந்தரம் பிள்ளையிடம் பலர் கல்வி கற்கத் தொடங்கினர்கள். முதுகுளத்தூரில் தோன்றிய அட்டா வதானம் சரவணப் பெருமாட் கவிராயர் என்பவர் இவ ரிடங் கல்வி கற்றுச் சிறப்புடன் விளங்கியவர்களுள் ஒருவ ராவர். இவருடைய ஆசிரிய அன்பு பாராட்டத்தக்கது. தமது பாடல்களில் ஆசிரியரைப் பாராட்டிப் பாடுவார்.

"மகபதி நராதிபதி நீதிபதி சேதுபதி
வாசற்பிர சண்ட வாக்கி
வடிதமிழ்ச் சோமசுந் தரகுருசு வாமியடி
மைக்குமடி மைக்குமடிமை."

என்பது போல் பல இடங்களில் காணலாம். இச்சரவணப் பெருமாட் கவிராயரிடம் இராமாநுச கவிராயர் கல்வி கற்றுச் சிறப்படைந்தார். இவர் இயற்றமிழாசிரியராக விளங்கிப் பல நூல்கட்கு உரையெழுதிய சிறப்புடையவர்.

**இவர் இயற்றிய நூல்**

சோமசுந்தரம் பிள்ளை மாணவர் பலருக்குக் கல்வி கற்பித்ததன்றி நூல்கள் இயற்றும் பணியில் மிகுதியாகக் கருத்துச் செலுத்தவில்லை. இவரால் இயற்றப்பட்டது திருக்கழுக்குன்றக் கோவை ஒன்றே.

---

## கரு. மதுரகவி

**தோற்றம்**

இவர் சேதுநாட்டில் தோன்றியவர். இசைப்பாடல்கள் பாடுவதில் வல்லவர். சேதுநாட்டு அமைச்சர் முத்திருளப்ப பிள்ளையையும், சிவகங்கையை ஆண்ட மருதுபாண்டியனையும் இசைப்பாடல்களாற் புகழ்ந்து பாடியுள்ளார். சேதுநாட்டை அரசாட்சி புரிந்த மங்களேச்வரி ராணி என்னும் அம்மையாரைப் பாடிக் காக்கை குளம் என்னும் விளைபுல ஊரை நன்கொடையாகப் பெற்றார்.

**ஆறுயிரம்**

மதுரகவியார் காக்கை குளத்தை நன்கொடையாகப் பெற்றபோது அவ்வூரில் உடையான் என்பவன் ஒருவன் இவருக்குப் பல அல்லல்கள் செய்தான். உடையான் செய்தியை மதுரகவியார் வீர சோழன் என்னும் ஊரில் இருந்த ஆறுயிரம் என்பவனிடந் தெரியப்படுத்தினர். ஆறுயிரம் உடையானை அடக்கி ஒடுக்கினர். அப்போது இவர்,

> "காக்கை குளமாங் கடிமலர்ப்பூம் பொய்கையந்த
> ஊர்க்குட் கராவாம் உடையானே—நீர்க்குவந்த
> வாரணமே நல்ல மதுரகவி நேமிதொட்ட
> ஆரணனே ஆறு யிரம்."

என்னுஞ் செய்யுளைப் பாடி ஆறுயிரம் என்பவனைப் பாராட்டினர்.

**மாணவர்**

இசைப் பாடல்கள் பாடுவதில் வல்லவராக இருந்த கவி குஞ்சரம் ஐயர் என்பவர் மதுரகவியிடம் பயின்றவர்.

**இயற்றிய நூல்**

இவர் இயற்றியது கந்தபுராணக் கீர்த்தனையும் வேறு பல இசைப்பாடல்களுமாம். இவர் மதுரை அங்கயற்கண் ணியைப் பாடிய, "எப்படியாட்கொள்வாயே" என்னும் முதலையுடைய இசைப்பாட்டு எத்தகையோருடைய உள் ளத்தையும் உருக்கும் தன்மை வாய்ந்தது.

---

## கசு. காஞ்சிபுரம் சபாபதி முதலியார்

**தோற்றம்**

தொண்டைவளநாட்டிலே காஞ்சிபுரத்திலே சபாபதி முதலியார் தோன்றினர். இளமையிலேயே இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுப் பெரும்புலவரானர். காஞ்சி யில் உள்ள பச்சையப்ப முதலியார் பள்ளியில் தலைமைத் தமிழ்ப்புலவராகப் பல ஆண்டுகள் பணி புரிந்தார். பிறகு சென்னையை அடைந்து பச்சையப்பன் கல்லூரியில் தமிழாசிரியராக அமர்ந்தார்.

**சென்னையில்**

சென்னையில் பலர் இவரிடம் கல்வி கற்றுப் புலவ ரானர்கள். அவர்களுள் புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார் தலைசிறந்தவர். அந்நாளில் சென்னை மாநகரில் திருவாவடுதுறையாதீன வித்துவான் தாண்டவராயத் தம்பி ரான், எழும்பூர்த் திருவேங்கடாசலமுதலியார், திருத் தணிகை விசாகப்பெருமாளையர், திருவம்பலத்தின்னமுதம் பிள்ளை, அட்டாவதானம் வீராசாமிச் செட்டியார்,

மழவை மகாலிங்கையர் முதலிய பல புலவர்கள் இருந்தனர்.

### மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கட்கு ஆசிரியர்

திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சென்னைக்குச் சென்றார். சபாபதிமுதலியாரைப்பற்றி அறிந்தார். தக்கார் சிலர் மூலமாகச் சபாபதிமுதலியாரைப் பழக்கம் பிடித்தார். அப்பொழுதே பிள்ளையவர்கள் பிள்ளைத்தமிழ் முதலிய நூல்களியற்றிய புலவராக இருந்தும் சபாபதி முதலியாரிடத்தில் சில நூல்களைப் பாடங் கேட்க விரும்பினார். சபாபதி முதலியாரும் அவ்வாறே கல்லாடம், திருவாசகம், திருக்கோவையார், திருக்குறள் பரிமேலழகர் உரை முதலிய நூல்களைப் பாடஞ் சொன்னார். மழவை மகாலிங்கையரையும் மீனாட்சிசுந்தரம் பிள்ளைக்கு அறிமுகப்படுத்தி வைத்தார்.

### ஆசிரியர் என்று போற்றுதல்

பிற்காலத்தில் ஒருமுறை முதலியார் சேதுவுக்குச் சென்று திரும்பினார். அப்பொழுது குடந்தையில் பிள்ளையவர்கள் கும்பகோணப்புராணம் அரங்கேற்றிக்கொண்டிருத்தலை அறிந்து அரங்கேற்றத்திற்குச் சென்றார். பிள்ளையவர்கள் முதலியாரைப் பெரிதும் பாராட்டி அங்கே சில நாட்கள் தங்கச் செய்தார். பிறகு திருவாவடுதுறைக்கு அழைத்துச்சென்று ஆதீனத்தலைவரைக் காணச்செய்தார். ஆதீனத்தலைவரிடம் முதலியார் தம்முடைய ஆசிரியர் என்று அறிமுகப்படுத்தி முதலியாருக்கு முதலிடம் அளித்துத் தாம் அப்பால் இருந்து தமது நன்றியறிதலைப் புலப்படுத்தினார். பிள்ளையவர்கள் முதலியாரிடம் காட்டிய பணிவைக்கண்டு ஆதீனத்தலைவரும் பிறரும் மிகுந்த வியப்படைந்தனர்.

**சிறப்புப்பாயிரம்**

பிள்ளையவர்கள் இயற்றிய அகிலாண்ட நாயகி பிள்ளைத் தமிழ் நூலுக்கு, முதலியார் சிறப்புப்பாயிரம் அளித்து அந்நூலை விரைவில் வெளியிடவேண்டும் என்று தெரியப் படுத்தினர். வியாசர்பாடி விநாயகமுதலியார் கட்டிய திரு மயிலைச்சித்திரச் சத்திரத்தைப் புகழ்ந்து பாடச்செய்து தக்கவாறு நன்கொடையும் பெறச்செய்தார். விநாயக முதலியார்மீது வியாசைக்கோவையைப் பிள்ளையவர்கள் பாடுமாறு செய்தவரும் சபாபதி முதலியாரே.

**இவர் இயற்றிய நூல்கள்**

1. சைவசமய விளக்க விஞவிடை
2. பிரமோத்திர காண்டப் பொழிப்புரை
3. பெரிய புராண உரை
4. திருவிளையாடற் புராண உரை
5. அருணசல சதகம்

முதலியன இவர் இயற்றிய நூல்கள். முருகதாச அடிகள் என்னும் தண்டபாணி அடிகள் இயற்றிய நூல்கள் சில சென்னைமாநகரில் இவருடைய தலைமையில் அரங் கேற்றஞ் செய்யப்பட்டன.

**இறுதி**

புகழ்பெற்ற பெரும்புலவராக விளங்கிய இவர் 1870-ஆம் ஆண்டில் இறைவன் திருவடிநீழலை யடைந்தார்.



## கஎ. முத்துச்சாமி ஐயங்கார்

### தோற்றம்

இவர் இராமநாதபுரத்தினர். ரா. இராகவ ஐயங்காருக்கு மாதுலரும் தமிழாசிரியரும் இவரே. மதுரைத் தமிழ்ச்சங்கத்தை உண்டாக்கிய பொ. பாண்டித்துரைத் தேவருக்குத் தமிழாசிரியர்களாக விளங்கிய பலருள் இவரும் ஒருவர். இவர் மிக இளமைப்பருவத்திலேயே கல்வி கற்றுச் சிறந்த அறிவாளியாக விளங்கினர்.

### கன்னட அவதானம்

கன்னட மொழியிலும் இவர் மிக வல்லவர். மிக இளமைப்பருவத்திலேயே கன்னட நாட்டரசராகிய கிருட்டிணராச உடையார் முன்பு கன்னடமொழியில் அட்டாவதானம் செய்து, பல்லக்கு, குடை, முத்துமாலே, பொற்குவை முதலியவைகளே நன்கொடையாகப் பெற்றார். உரை வன்மையுஞ் செய்யுள் இயற்றுந் திறமும் நன்கு அமையப் பெற்றவர்.

### மாணக்கர்கள்

ரா. இராகவ ஐயங்கார், பொ. பாண்டித்துரைத்தேவர், மு. இராகவ ஐயங்கார், திரு. நாராயண ஐயங்கார், முதலிய பலர் இவரிடத்தில் தமிழ் கற்றுச் சிறந்த புலவர்களாக விளங்கினர்கள். சேதுபதியின் பேருதவியால் நூலாராய்ச்சி செய்தல், மாணவர்கட்குப் பாடஞ்சொல்லுதல் முதலிய பணிகளில் எத்தகைய கவலேயுமில்லாமல் ஈடுபட்டிருந்தார். இவருடைய அவதானசக்தி பெரும்புலவர் திரிசிரபுரம் மீனட்சிசுந்தரம் பிள்ளேயவர்களாலும் நன்கு பாராட்டப் பெற்றது.

**இயற்றிய நூல்கள்**

இவர் இயற்றிய நூல்கள் சந்திராலோகம், மணவாள மாமுனி நூற்றந்தாதி, நூற்றெட்டுத் திருப்பதித் திருப் பதிகங்கள், குருகைக் கலம்பகம் முதலியன. தமிழ்ச் சங்கத்தில் தொண்டுசெய்து வளர்த்தவர்கள் இவருடைய மாணவர்களாதலின் மதுரைத் தமிழ்ச்சங்கத் தோற்றத்திற் கும் வளர்ச்சிக்கும் இவர் பெரிதுந் துணைபுரிந்தவராவார்.

---

## கஅ. முத்துராமலிங்க சேதுபதி (க)

**தோற்றம்**

இவர் இராமநாதபுரத்தில் அரசர் வழிமுறையில் தோன்றியவர். இளமைப்பருவத்திலேயே கல்வியை நன்கு கற்றுச் சிறந்த புலமையடைந்தார். பூவேந்தராக விளங்கிய தோடு பாவேந்தராகவும் விளங்கினர்.

**வாழ்க்கை**

துவாத்ரீம் சதாவதானம் சரவணப்பெருமாட் கவி ராயர் முதலிய புலவர்கள் பலர் இவருடைய அவையில் அமர்ந்திருந்தனர். அவர்களோடு அருங்கலைகளை ஆராய் தல் செய்யுளியற்றல் முதலிய நற்பணிகளிலே ஈடுபட்டுத் தமது காலத்தைப் போக்கினர். இவருடைய தனிப்பாடல் கள் முந்நூறுக்குமேல் தனிச்செய்யுட் சிந்தாமணியில் இடம் பெற்றுள்ளன. புலவர்களோடு செய்யுளில் உரை யாடுவதில் இவருக்கு மிகுந்த விருப்பம் உண்டு. இவர் ஏதேனும் ஒரு பொருளைக் குறித்துச் செய்யுளாக முன் னிரண்டடிகளால் வினவுவார்; புலவர்கள் பின்னிரண்டடி களால் மறுமொழி கூறுவார்கள்.

**தனிப்பாடல்**

இவருடைய தனிப்பாடல்களில் சிலேடைகள், விடுகதைகள், வணக்கங்கள், நடுவெழுத்தலங்காரங்கள், வினுவுத்தரங்கள் முதலிய எல்லாவகைகளும் உண்டு; மாதிரிக்குச் சில காட்டுவாம்.

**சிலேடை**

ஆனைமுகக்கடவுளுக்கும் பானைக்குஞ் சிலேடையாகப் பாடியது.

"அங்குசவன் கைக்கொளலால் ஆருங்குட் டிக்கொளலால்
பொங்கலிட்டுப் பூசை புரிதலால்—கங்குல்பகல்
தானநீர் தாங்குகையால் சாரப் பதந்தரலால்
ஆனைமுகன் பானையென லாம்."

[அங்குசம் வன்கைக்கொளலால்: அம் குசவன் கைக் கொளலால்; குட்டிக்கொளல் - பிள்ளையார் முன்பு தந்தலையிற் குட்டிக்கொள்ளுதல்; பானையைத் தட்டிப்பார்த்து வாங்குதல். தானநீர் - மதநீர், தண்ணீர்.]

**விடுகதை**

"மட்டையணி யும்பூ வணையுமுடிக் குஞ்சிவிக்
கட்டியா டொட்டேறக் காட்டுமே—வெட்டுவாள்
அம்பனைய கண்ணார் அலவிச் சிலேடையொடு
பம்புகதை யின்பயனென் பார்."

**முருகக்கடவுள் வணக்கம்**

"இடங்கொண்ட தெய்வப் பிடிவள்ளி மேவ இசைந்து விம்மித்
தடங்கொண்ட பன்னிரு தோட்பொருப் பேசின் தனையரெமை
அடங்கொண்ட நோய்வருத் தாதறுத் தாதரித் தாள்முருகா
வடங்கொண் டறிதுயில் மான்மரு காமயில் வாகனனே."

**வினுவிடை**

சேதுபதி வினுவும் துவாத்ரீம் சதாவதானம் சரவணப் பெருமாட் கவிராயர் விடையும்:

"நஞ்சுடைய கண்டத்து நாதன் முடிமீது
குஞ்சு மதியணிந்து கொள்வானேன்?—அஞ்சாமல்
மூத்தபிள்ளை அன்று முறித்தகொம்பைக் கேட்குமென்று
சேர்த்துவைத்துக் கொண்ட திறம்."

### இயற்றிய நூல்கள்

புவிராயராகவும் கவிராயராகவும் இருந்த இவர்,

1. வள்ளி மணமாலை
2. நீதி போதம்
3. பால போதம்
4. சரசசல்லாப மாலை
5. சடாக்கரசாரப் பதிகம்
6. முருகாநுபூதி
7. பிரபாகர மாலை
8. காயகப்பிரியா

என்னும் நூல்களையும் இயற்றியுள்ளார்.

### இறுதி

இவ்வாறு கவியாட்சியும் புவியாட்சியும் இயற்றிக் கொண்டிருந்த இவர் 1873-ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 28-ஆம் நாள் மண்ணுலக வாழ்வை விட்டு விண்ணுலக வாழ்வைப் பெற்றார்.

## கசஎ. கனம் கிருட்டிண ஐயர்

### தோற்றம்

திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலே உள்ள உடையார் பாளையம் பிரிவில் திருக்குன்றம் என்னும் ஊர் உள்ளது. இந்த ஊரிலே சுமார்த்த அந்தணர் குலத்திலே எண்ணா யிரத்தவர் வகுப்பில் ஏறக்குறைய நூற்றைம்பது யாண்டு கட்கு முன்னர் கிருட்டிணையர் தோன்றினர். இவருடைய தந்தையார் பெயர் இராமசாமி ஐயர். இராமசாமி ஐயர் இசைப் பயிற்சியிலும் தமிழ்ப் பயிற்சியிலும் சிறந்து விளங் கினர். இசைப்பாடல்களை இயற்றும் ஆற்றலும் இவருக்கு நன்கு அமைந்திருந்தது. இவருக்கு மக்கள் ஐவர் தோன்றினர். அவர்களுள் இறுதியில் தோன்றியவர் கிருட்டிண ஐயர்.

### இசைப் பயிற்சி

கிருட்டிண ஐயரும் அவருடைய உடன்பிறந்தவர் களும் பள்ளியிற் கல்வி கற்றபின் தந்தையாரிடம் இசைப் பயிற்சி தொடங்கினர். பிறகு அரியலூர் சண்பகமன்னர் என்னும் வைணவப் பெரியாரிடத்தும் இசைப்பயிற்சி பெற்றனர். அதன்பிறகு தஞ்சையை அடைந்து பச்சை மிரியன் ஆதிப்பையரென்னும் இசைப்புலவரிடத்தில் இசைப்பயிற்சி பெற்றனர். கிருட்டிண ஐயர் தம்முடைய உடன்பிறந்தவர்கள் எல்லோரினுஞ் சிறந்து விளங்கினர். ஊக்கமும் விடாமுயற்சியும் இவர்பால் நன்கு அமைந் திருந்தன. இசைப்பயிற்சி முடிவடைந்தபின் தஞ்சையரச ரிடமே இசைப்புலவராக அமர்ந்திருந்தனர். இவர்க ளுடைய இசைத்திறமை அரசராலும் மற்றைய இசைப் புலவர்களாலும் நன்கு பாராட்டப்பெற்றது.

**கனவழி**

பொப்பிலி என்னும் ஊரில் அந்நாளில் கேசவையா என்னும் இசைப்புலவர் சிறந்து விளங்கினர். அவர் கன மார்க்கம் என்னும் இசைப்பயிற்சியில் மிகவும் வல்லவர். கனமார்க்கம் என்பது மிகவும் வருந்தித் தொல்லைப்பட்டுக் கற்றுக்கொள்ள வேண்டிய ஒருவகை இசை. அது மிகக் கனமான ஒலியுடன் அமைந்து விளங்கும். கேசவஐயா அந்தக் கனமார்க்க இசைப்பயிற்சியில் தேர்ச்சி பெற்றவர். அவர் ஒருமுறை தஞ்சாவூருக்கு வந்தார். தஞ்சை மன்ன ரிடத்தில் தமது இசைச்சிறப்பைக் காட்டி அரசரையும் அங்கிருந்தவர்களையும் மகிழச் செய்தார். அரசருடைய விருப்பப்படி சிறிதுகாலம் அங்கே தங்கியிருந்தார். கன வழி என்னும் இசையை விரிவாகப் பயிற்சிசெய்த இசைப் புலவர்கள் அக்காலத்தில் இங்கு இல்லை. கேசவ ஐயாவின் இசையைக்கேட்ட இசைப்புலவர்கள் அவரை நன்கு மதித்துப் பாராட்டினர்கள். அவருடைய இசை தஞ்சை யரசருக்கும் விஞ்சிய இன்பத்தை யளித்தது. இவ்வளவு அருமையான இசையைப் பயின்றவர்கள் இங்கு எவரும் இல்லையே என்று உள்ளத்தில் எண்ணினர். தமது அவையில் இருந்த இசைப்புலவர்களைப் பார்த்து, "இவரைப் போல் கனவழியில் இசைபாடக் கூடியவர்கள் இங்கு யாராவது இருக்கிறார்களா?" என்று உசாவினர். தங்க ளுக்குப் பயிற்சி யில்லாதபடியால் எவரும் பாடமுடியு மென்று சொல்லவில்லை. "இதுவரையில் கற்றிராவிட்டால் இனிமேலாவது கற்றுக்கொண்டு பாட முடியுமா?" என்று உசாவினர். அங்கிருந்த பலரும், "எங்கட்கு அகவை மிகுந்துவிட்டது. இனிமேல் கற்றுக்கொண்டு பாடுவ தென்பது இயலாது," என்று கூறிவிட்டனர்.

**கிருட்டிண ஐயர்**

அங்கு கிருட்டிண ஐயரும் இருந்தார். அவர் மனத் திட்பம் உடையவர். தாம் முயற்சிசெய்து கனவழி இசையைக் கற்றுவிடலாம் என்று எண்ணினர். ஆகவே இவர் தாம் எழுந்து, "கேசவையா எனக்குக் கனவழியைக் கற்றுத்தந்தால் உழைத்துப் பயிற்சிசெய்து பாடுகிறேன்" என்று கூறினர். அங்கிருந்தவர்கள் இவர் கற்றுக்கொண்டு பாடுவது அருமை என்று எண்ணினர்கள். கேசவையா தாம் கனவழியைக் கற்றுக் கொடுப்பதாகக் கூறினர்.

**பயிற்சி**

பொப்பிலி கேசவையா தாம் வாக்களித்தபடி கனவழியின் இலக்கணங்களைக் கிருட்டிண ஐயருக்குக் கற்பித்தார். சில நாட்களில் கிருட்டிண ஐயர் அவைகளையெல்லாம் உணர்ந்துகொண்டார். பிறகு கபித்தலம் என்னும் ஊருக்குச் சென்று தம்மிடம் அன்புடைய நண்பர் ஒருவரின் ஆதரவில் தங்கிப் பல நாட்கள் பயிற்சி செய்தார். தெய்வத் திருவருளால் அவ் இசைப்பயிற்சி இவருக்கு நன்கு கைகூடியது.

**கனம்**

மிக முயன்று கனவழியைப் பயின்ற கிருட்டிண ஐயர் தஞ்சைக்குச் சென்ருர். தாம் கனவழியைப் பயின்று வந்திருப்பதாகவும் அரங்கேற்றத்திற்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்றும் தெரிவித்தார். அரசர் நன்னுள் ஒன்றிலே அவை கூட்டினர். இசைப் புலவர்கள் பலரும் பொப்பிலி கேசவஐயாவும் அவையிற் கூடியிருந்தனர். தாம் கற்ற கைவரிசைகளை யெல்லாம் கிருட்டிண ஐயர் காட்டினர். இசைப்புலவர்களும் பிறரும் கருத்தொருமித்தவர்களாய் ஓவியப்பாவையைப்போல் அசைவற இருந்து கேட்டனர். கிருட்டிண ஐயர் தம்முடைய முழு ஆற்றலை

யுங் காட்டிப் பாடினர். பொப்பிலி கேசவஐயா மிகுந்த வியப்புடன் இசையைக் கேட்டுக்கொண்டிருந்தார். இசை முடிந்தபிறகு அரசர் கேசவஐயாவைப் பார்த்தார். அவர் அரசரைப் பார்த்து, "இத்தகைய ஆண்மையாளர்களை நான் எங்குமே பார்த்ததில்லை. சிலகாலமே இவர் என்னிடம் கனவழியைக் கற்றுக்கொண்டபோதிலும் எனக்கு மேலாகப் போய்விட்டார். இவருக்குக் கடவுள் நீண்ட வாணாளையும் வலிமை வாய்ந்த உடலையும் கொடுத்தருள வேண்டும்," என்று வாழ்த்துக் கூறினர். அரசர் கிருட்டிண ஐயருக்கு நல்ல பரிசுகள் வழங்கினர். அன்றுமுதல் அவருடைய பெயர் கனம் கிருட்டிண ஐயர் என்று வழங்கலாயிற்று.

**இசைப்பாடல்கள் இயற்றல்**

இசைப் புலவராக விளங்கிய இவர் இலக்கண இலக்கியப் பயிற்சியும் அமைந்து வெண்பா, கட்டளைக் கலித்துறை, விருத்தம், இசைப் பாடல்கள் முதலியவைகளை நன்கு பாடக்கூடியவராக விளங்கினர். இசைபாடத் தொடங்கும்போதே, அப்போதே இயற்றிக்கொண்டு பாடும் ஆற்றலும் இவரிடம் நன்கு அமைந்திருந்தது. இவருடைய பாடல்கள் எதுகை மோனை முதலியவைகள் அமையப் பெற்றுச் சிறந்து விளங்கும். எக்கடவுளரிடத்தும் இவருக்கு வெறுப்புக் கிடையாது. எல்லாக் கடவுளர்மீதும் இசைப்பாடல்கள் இயற்றியிருக்கிறார். சிறிது காலம் கபித்தலம் என்னும் ஊரில் மூப்பனர் ஒருவரிடம் தங்கியிருந்தார். பிறகு திருவிடைமருதூரை அடைந்து அங்குச் சிறிதுகாலம் வசித்திருந்தார்.

**பலவூர்கட்குச் செல்லுதல்**

பிறரால் புகழ்ந்து பாராட்டப்பெற்றுச் சிறப்புப் பெறும்நிலையில் உள்ள அறிஞர்கள் அரசரிடம் அமர்ந்திருந்

தாலும் பலவூர்கட்குஞ் சென்று தமது பெருமையைப் புலப்படுத்திச் சிறப்படைதல் இயற்கை. அவ்வாறே இவரும் கும்பகோணம், மன்னார்குடி, திருச்சேறை, திருவையாறு, மாயூரம், சென்னை முதலிய பலவூர்கட்குஞ் சென்று தமது இசைத்திறமையைப் புலப்படுத்திச் சிறப்புக்கள் பெற்றார்.

**உடையார்பாளையத்தில்**

அந்நாளில் உடையார்பாளையத்தில் கச்சிரங்க உடையார் என்பவர் பெருநிலக் கிழாராக இருந்தார். அவர் கிருட்டிண ஐயருடைய அருமை பெருமைகளை யெல்லாம் நன்கு உணர்ந்தார். அவர் இசையிற் சிறந்த பயிற்சியுடையவர். அவர் கிருட்டிண ஐயரைத் தம் அவைக்களப் புலவராக அமர்த்திக்கொள்ள வேண்டும் என்று எண்ணினார். தக்க மனிதர்களை அனுப்பிக் கிருட்டிண ஐயரைத் தம்பால் அழைப்பித்தார். இவரைப் பாராட்டிப் போற்றினார். இசையைக் கேட்டு மகிழ்ந்தார். தமது நோக்கத்தைப் புலப்படுத்தினார். இசைப்புலவர் பெருநிலக்கிழாரின் பேரன்பையும், உயர் குணங்களையும் எண்ணி மகிழ்ந்தார். அவ்விடமே தங்கி யிருப்பதற்கு உடன்பட்டார். பெருநிலக்கிழார் இவருடைய இசை யமுதை நாள்தோறும் பருகி மகிழ்ந்ததுடன் தகுந்த நன்கொடைகள் வழங்கிப் பெருமைப்படுத்தினார்.

**தலையாட்டல் ஒன்றேபோதும்**

ஒருமுறை பெரிய இசைப்புலவர்கள் பலர் வேறிடங்களில் இருந்து உடையார்பாளையத்திற்கு வந்தனர். அவர்கள் தமது இசைத்திறமையைப் பெருநிலக்கிழாரிடம் காட்டித் தக்க பரிசு பெற்றதுடன் கிருட்டிண ஐயருடைய இசையையுங் கேட்டு மிகுந்த களிப்படைந்தார்கள். பிறகு

புலவர்கள் கிருட்டிண ஐயரை அவருடைய வீட்டிற்கண்டு உரையாடிக்கொண்டிருந்தனர். அவர்கள் பெருநிலக்கிழாரும் கிருட்டிண ஐயரும் ஒன்றுபட்ட உள்ளத்தினராய்ச் சிறந்து விளங்குதலை அறிந்துணர்ந்து கொள்ளாது, "அந்தோ! இந்த உடையார்பாளையம் காட்டுக்குள்ளேயன்றோ இருக்கிறது. உங்களுடைய இசைப்பெருமை இந்தக் காட்டுக்குள்ளே வீணாகப்போகிறதே. நீங்கள் பெரிய அரச சமூகங்களில் அமர்வீர்களானால் பெரும் கொடையும் பெரும் புகழும் பெற்றுச் சிறந்து விளங்கலாமே" என்று கூறினார்கள். இதனைக் கேட்ட கிருட்டிண ஐயர், "ஆம்; நீங்கள் கூறுவது உண்மைதான்; ஆனால் இங்குக் கிடைக்கும் கச்சியானந்த ரங்கரின் தலையாட்டல் போன்ற உண்மைப் போற்றுதல் அவ்விடங்களில் அகப்படாதே. வீண் புகழ்ச்சியும் வெளிப்பகட்டுந்தானே கிடைக்கும். அதற்கு என்ன செய்கிறது?" என்று கேட்டார். இவருடைய மனப்போக்கை உணர்ந்துகொண்ட அவர்கள் தங்கள் வாயை மூடிக்கொண்டார்கள். இவர் நீண்டநாள் அவ்விடமே யிருந்தார். உ. வே. சாமிநாதையருடைய தந்தையாராகிய வேங்கட சுப்பையர் இவரிடம் பன்னிரண்டு ஆண்டுகள் இசைப்பயிற்சி செய்து இசையைக் கற்றுணர்ந்தாராம்.

இறுதி

கிருட்டிண ஐயர் அறுபது ஆண்டுகட்குமேல் இவ்வுலகில் வாழ்ந்து இசைத்தமிழை வளர்த்து இறுதியில் இவ்வுலக வாழ்வைத் துறந்தார்.

---

## உ0. முகவூர்க் கந்தசாமிக் கவிராயர்

**தோற்றம்**

இவர் பாண்டி நாட்டிலே சேற்றாருக்கு அண்மையில் உள்ள முகவூரிலே 1823-ஆம் ஆண்டிற் பிறந்தார்.

**கல்வி**

மிக இளமைப் பருவத்திலேயே திருவாவடுதுறை ஆதீனத்தை அடைந்து சுப்பிரமணிய தேசிகரோடு வித்து வான் தாண்டவராயத் தம்பிரானிடம் கல்வி கற்றுச் சிறப் படைந்தார். பண்டைப்பனுவல்கள் பலவற்றையும் இவர் தமது நெஞ்சத்தையே ஏடாகக் கொண்டு வரைந்திருந்தார். எச்சமயத்திலும் எத்தகைய அவையிலும் பாடல்களை எடுத் துக் கூறி அவையினரைக் களிப்பிப்பதில் மிகவல்லவர். மு. ரா. அருணசலக் கவிராயர், மு. ரா. சுப்பிரமணியக் கவி ராயர், மு. ரா. கந்தசாமிக் கவிராயர் ஆகிய மூவரின் தந்தை யாராகிய இராமசாமிக் கவிராயர் கந்தசாமிக் கவிராயருக்குத் தம்பியாவார். க. மீனாட்சி சுந்தரக் கவிராயரும், திருவாவடு துறை ஆதீன வித்துவான் பழனிக்குமாரத்தம்பிரானும் கந்தசாமிக் கவிராயருடைய மைந்தர்களாவர்.

**பிள்ளையார் கோயில்**

இவர் தமது பிறப்பிடமான முகவூரிலே பிள்ளையார் கோயிலொன்றைக் கட்டிப் பூசை முதலிய நடப்பதற்கு ஏற்பாடு செய்திருக்கிறார். இவர் இக்கோயிலைக் கட்டும் போது இவருடைய இளவலாகிய இராமசாமிக் கவிராயர் உறுதுணையாக இருந்து நல்லுதவி செய்தார்.

**தனிப்பாடல்கள்**

இவர் தனிப்பாடல்கள் பல செய்துள்ளார். இவருடன் கல்விகற்ற சுப்பிரமணிய தேசிகர், ஒருநாள் இரவில் நிலா

வெளிச்சத்தில் இவரோடு உரையாடிக்கொண்டிருந்தார். அப்பொழுது இவரைப்பார்த்து, "இத்திங்களைப்பற்றி ஒரு செய்யுள் பாட வேண்டும்" என்று கூறினர். உடனே இவர்,

"வாடிவரு வார்க்கனையாம் சற்குருசுப்
பிரமணிய மாத வன்தான்
கோடிநிதி யாவருக்குங் காவலர்பெற்
றிடக்கொடுக்குங் குணத்தி னாலே
நாடிநம தணிமதியுங் கலாநிதியென்
றுவந்துநம்மை நல்க வெண்ணித்
தேடிலென்செய் குவம்என்றே திங்களும்அந்
தரத்தோடித் திரிகின் றனே."

என்னுஞ் செய்யுளைப் பாடினர். இதனைக் கேட்ட சுப்பிரமணிய தேசிகர் மகிழ்ந்து இவருடைய புலமையைப் பாராட்டினர்.

**திருமணம்**

இவர் திருவாவடுதுறையிற் கல்வி கற்று முடிந்தபின் திருமணஞ் செய்து கொண்டு இல்வாழ்வை மேற்கொள்ள வேண்டும் என்று எண்ணினர். தமது எண்ணத்தைத் தம் ஆசிரியராகிய தாண்டவராயத்தம்பிரானுக்குத் தெரியப் படுத்தினர். அவர் இவருடைய திருமணத்திற்கு உதவி செய்ய வேண்டுமென்று மேலகரம் வைத்தியலிங்கக் கவி ராயருக்கு,

"தேவரெலாம் பரவுதிருக் குற்றாலச்
சிவன்கதைசெந் தமிழாற் செய்த
நாவலர்தம் பரம்பரையில் உதித்தவயித்
தியலிங்க நாவ லோய்இப்
பூவலயம் முழுதுமுன்றன் பெருமையே
பெருமையெனப் புகழும் வண்ணம்
ஆவலுடன் வருகந்த சாமிநா
வலன்மணத்தை அணிசெய் வாயே."

என்னுஞ் செய்யுளை எழுதியனுப்பினர். திருமணஞ் சிறப்பாக நடைபெற்றது.

## குறவஞ்சி

கந்தசாமிக் கவிராயரும் இவருடைய இளவலாகிய இராமசாமிக் கவிராயருஞ் சேர்ந்து சேற்றூர்ப் பெருநிலக் கிழார் முத்துச்சாமித் துரையின்பேரில் குறவஞ்சி என்னும் நூல் பாடி அரங்கேற்றஞ் செய்தனர். முத்துச்சாமித் துரை இருவருக்குந் தக்கவாறு நன்கொடை வழங்கியதுடன் இருவரையுஞ் சிவிகையில் வைத்து நகர்வலமுஞ் செய்வித்தார். அப்போது தானதிபதியாக இருந்த சுந்தரமகாலிங்கம் பிள்ளை என்பவர் சிவிகையைச் சிறிது தொலை சுமந்து சென்றார். இராமசாமிக் கவிராயர் தானதிபதியின் செயலைப் பாராட்டிச் செய்யுள் ஒன்று பாடினர். கந்தசாமிக் கவிராயர் நூல்கள் இயற்றியதாகத் தெரியவில்லை.

## இறுதி

இவர் தேவதானம் தவம்பெற்ற நாயகிக்கு மலர்ச் செண்டும் இண்டை மாலையும் நாள்தோறுஞ் சாத்தும்படி நிலையான ஏற்பாடு செய்துள்ளார். இவ்வாறு சிறந்து விளங்கியிருந்த இவர் 1887-ஆம் ஆண்டில் தமது அறுபத்து நான்காவது அகவையில், இவ்வுலகவாழ்வைத் துறந்து இறைவன் திருவடி நீழலையடைந்தார்.

---

# உக. வேங்கட்டராயலு நாயுடு

**தோற்றம்**

இவர் உடுமலைப்பேட்டை என்னும் ஊரில் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் சீநிவாச நாயுடு. அவ்வூரில் தமிழறிஞராகவும் வழக்கறிஞராகவும் இருந்த முனியப்ப பிள்ளை என்பவரிடம் தமிழ் நூல்களை ஓதியுணர்ந்து செய்யுள் பாடும் திறனடைந்தார். மு. ரா. கந்தசாமிக் கவிராயர் அந்நாளில் உடுமலைப் பேட்டைப் பள்ளியில் தமிழாசிரியராய் அமர்ந்திருந்தார். அதனால் இருவருக்கும் பழக்கம் உண்டாகியிருந்தது. கந்தசாமிக் கவிராயர்மீது சிலேடைப் பாடல்கள் பலவற்றைப் பாடினார்.

**முருகனுக்கும் கந்தசாமிக் கவிராயருக்கும்
சிலேடையாகப் பாடியது.**

"கனவானந் தியக்குறப்பொற் பணங்கொடுசித்
தமுமின்பாக் களியி சைச்செந்
தினகரவோ துங்கவிநா யகர்க்கிளையாய்
பெரும்புகழ்ச்சத் தியங்கைக் கொண்டாய்
பனிரக்கம் பெறுமனனே யெனவரலால்
திருவதனப் பதிக்கண் மேவும்
புனிதச்சொல் கந்தசுவா மிக்கவிஞன்
குமரனெனப் புகல லாமே."

இதைப்போல் கவிராயர்மீது பாடப்பட்ட பாடல்கள் பல.

**இயற்றிய நூல்கள்**

1. சீரங்கநாதர் பிரபந்தத் திரட்டு
2. கம்பராமாயண ஆரணிய காண்டவுரை

முதலியன. சீரங்கநாதர் பிரபந்தத் திரட்டில் பல சிறு நூல்கள் அடங்கியுள்ளன.

**இறுதி**

நூலாசிரியராகவும் வழக்கறிஞரின் எழுத்தாளராகவும் தமிழாசிரியராகவும் விளங்கிய இவர் 1888-ஆம் ஆண்டில் மண்ணக வாழ்வைத் துறந்து விண்ணகம் புகுந்தார்.

---

## உஉ. முதுகுளத்தூர் ஆறுமுகம் பிள்ளை

### தோற்றம்

மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த முதுகுளத்தூரிலே ஆறுமுகம் பிள்ளை பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் பூலாறுசாமிப் பிள்ளை.

### கல்வி

சரவணப்பெருமாள் கவிராயரிடம் இவர் கல்வியை நன்கு கற்றுத் தேறினார். செய்யுள் பாடுந்திறமை மிக நன்றாக உண்டாயிற்று. விரைவாகவும் வேடிக்கையாகவும் பல பாடல்களை அடிக்கடி பாடலானார்.

### வாழ்க்கை

இவர் காலத்தில் புலவர்கள் வாழ்க்கை வள்ளல்களைப் பாடிப் பரிசில் பெற்று அதனைக் கொண்டு காலங்கழிப்பது தான். ஆறுமுகம் பிள்ளையும் அவ்வாறே தமது வாழ்க்கையைத் தொடங்கினார். பழவினைப் பயனால் நோய் அடிக்கடி இவரைப் பிடித்து வருத்தத் தொடங்கியது. உடற்பிணியுடையவர்களை வறுமைப்பிணியும் பிடித்துக்கொண்டால் அவர்கள் படும் அல்லலைப் பற்றிக் கேட்கவும் வேண்டுமோ? நோயுற்ற ஆறுமுகம் பிள்ளை பாயும் படுக்கையுமாகக் கிடந்தார். நோயின் தொல்லையை மறத்தலுக்குச் செய்யுள் பாடுதலையே மருந்தாகக் கொண்டு காலங்கழித்தார்.

### இல்லத்தில் தீப்பிடித்தல்

இவர் நோயும் பாயுமாகக் கிடந்தபோது இவருடைய இல்லத்திலே தீப்பிடித்துக்கொண்டது. எவ்வளவோ முயன்றும் தீயை அணைக்கமுடியவில்லை. வீடு அடியோடு எரிந்து அழிந்ததோடு வீட்டில் இருந்த பொருள்கள் யாவும் நாசமாயின. இவருடைய மனைவி மக்களும் மற்றவர்களும் அழுது புலம்பினர். தங்குதற்குத் தக்க இடமில்லாமற் போய்

விட்டது. முறையூரில் அந்நாளில் வள்ளலாக விளங்கி யிருந்த சண்முகஞ் செட்டியார் இவருக்கு அடிக்கடி பொருளுதவி செய்து பாதுகாத்துக் கொண்டிருந்தார். இல்லம் தீப்பிடித்து எரிந்து அழிந்தபின் சண்முகஞ் செட்டியாருக்குப் பின் வருஞ் செய்யுட்களை எழுதியனுப்பினர்.

"இந்தமதி ஈரைந்தாந் தேதிஅந்தோ
என்வீட்டில் தீப்பிடித்தே இடைவி டாமல்
வெந்ததனுல் சாமான்கள் எல்லாம்வெந்து
வேட்டிவெந்து சேலைவெந்து வெறும்வீ டாக்கிச்
சந்தியிலே விட்டுவிடத் தேம்பித் தேம்பித்
தாரமழ மக்கள்அழச் சார்ந்தோர் ஏங்க
வந்திடுமித் துயர்சகிக்க முடியா தாகி
வள்ளால்நின் இடத்திதை வழுத்தி னேனே."

"தீப்பிடித்த என்குடிலைச் செத்தையினுல் மூடுதற்கும்
மாப்பிடித்த மார்பா வழியுமில்லை—ஏய்ப்புமில்லை
எந்தமட்டில் சித்தம் இரங்குமோ நாயேனுக்
கந்தமட்டும் போதும் அருள்."

"சேயுமனை யும்நானும் சேர்ந்தழத் தீப்பிடித்துப்
பாயுந் துணிமணியும் பாழாக்க—நோயும்
தணியாது நெஞ்சம் தளர்வேற்கே தேனும்
மணியார்டர் செய்தனுப்பு வாய்."

என்பன முதலிய பல செய்யுட்களை எழுதியனுப்பினர். செட்டியார் முதலிய சிலருடைய உதவிபெற்று வீடு வாசல்களை ஒழுங்குசெய்தார். உடற்பிணியும் வறுமைப்பிணியும் இறுதிவரை விடாப் பிடியாகப் பற்றியிருந்தபடியால் வாணுள் முழுவதும் வருந்தியே காலமானர்.

**தனிப் பாடல்கள்**

நோயினுல் பற்றப்பட்ட இவர் அவ்வச் சமயங்களில் தனிப்பாடல்கள் பலவற்றை இயற்றிய தன்றி நூலாக யாதுஞ் செய்ததாகத் தெரியவில்லை.

---

## உங. சரவணப்பெருமாட் கவிராயர் (உ)

### தோற்றம்

இவர் முன்னர்க் கூறப்பெற்ற அட்டாவதானம் சரவணப்பெருமாட் கவிராயருக்குப் பேரர். இவருடைய தந்தையார் பெயர் அருணாசலக்கவிராயர்.

### கல்வி

சரவணப்பெருமாட் கவிராயருடைய தந்தையுஞ் சிறந்த புலவர். இவர் தந்தையாரிடமும் பிறரிடமும் கல்வி கற்றுச் சிறந்த புலமையடைந்தார். அவதானங்கள் செய்வதிலும் வல்லவரானார். துவாத்ரீம் தசாவதானம் சரவணப் பெருமாட் கவிராயர் என்று இவரை வழங்குவர். முன்னோர்களைப் போலவே இவரும் சேதுமன்னர்களுடைய அவைக்களப் புலவராக அமர்ந்தார். இவர்காலத்தில் ஆட்சி புரிந்திருந்த மாட்சிமிகு மன்னர் முத்துராமலிங்க சேதுபதி என்பவராவர். சேதுபதியுங் கல்வியறிவிற் சிறந்து உயர்ந்த புலமைபெற்றவர். இருவரும் பேசவேண்டிய செய்திகளை யெல்லாம் செய்யுள் வடிவமாகவே பேசிக்கொள்வர். அரசருடைய வினா முன்னிரண்டடிகளில் பாட்டாக வரும். இவருடைய மறுமொழி பின்னிரண்டடிகளில் பாட்டாக முடிவுபெறும். மாதிரிக்குச் சிலவற்றை இங்கே காண்க.

### மூட்டைப்பூச்சியும் மெத்தையும்

மெத்தையில் மூட்டைப்பூச்சி இருத்தலையுணர்ந்த பணியாளர்கள் மெத்தையைத் தடியால் நன்கு புடைத்து உதறினர். இதனைப் பார்த்துக்கொண்டிருந்த அரசர்,

> "இஞ்சுவரை மூட்டை துளைக்கச் சுகங்கொடுக்கும்
> பஞ்சணையை மோதுவதென் பாவலவா?—

என்று உசாவினர். உடனே கவிராயர்,

—வஞ்சகரைச்
சேர்ந்தவரும் அன்னவர்தந் தெண்டனைக்கு ளாவதுபோல்
சார்ந்ததனுல் வந்தவினை தான்."

என்று கவிராயர் மறுமொழி கூறினர். இன்னும் இவ்வாறே,

" வரங்களுயிர்க் கீந்தளிக்கும் மால்வால் படைத்த
குரங்குதுணைக் கொண்ட குறிப்பென் ?—உரங்கொண்ட
வல்லவர்க்குப் புல்லும் வலியபடை என்பாரச்
சொல்வலிகாக் கைக்குமதித் து."

எனப் பலவாறு உரையாடி மகிழ்வர்.

அரசர் பாடல் பெற்றது

உரையாடல் செய்யுள் வடிவில் நிகழும்போது புலவர் பெருமை தோன்றவே அரசர் விளிப்பர். இதனுல் புலவர் அரசருடைய பாடல் பெற்றூராயினர். இதனை எண்ணி மகிழ்ந்த புலவர் ஒருநாள்,

" முன்பேறு சீர்படைத்த முத்தமிழ்வல் லோரெவரும்
என்பேறு பெற்றூரென் றியார்புகல்வார்—அன்பேறு
தேவைமுத்து ராமலிங்கச் சேதுபதி என்மேற்சொல்
பாவையொப்பா யாவர்பெற்றூர் பார்."

என்று பாராட்டிப் பாடினர். மேலும் இவர் அரசரைப் பாராட்டிப் பாடிய பாடல்கள் பல. அட்டநாகபந்தம், நடுவெழுத்தலங்காரம், சமுத்திரவருணனை முதலிய பாடல்களைப் பாடுதலில் இவர் மிகவும் வல்லவர். எட்டையபுரம், ஊற்றுமலை முதலிய சமத்தானங்கட்கும் அடிக்கடி சென்று பரிசுபெற்றுத் திரும்புவார். எட்டையபுரம் பெருநிலக் கிழார்மீது ஒருமுறை இவர் பாடிய பாடல்களுள், பின் வரும் விடுகதைப் பாட்டையும் பாடினர்.

" கொடியேறும் பிஞ்சுவிடும் காயும் முற்றும்
கொடுபழுக்கும் துவையல்செய்தால் கசக்க லாகும்
அடியேறுங் கிள்ளியதைக் கொய்வார் நன்னூல்
ஆராய்ந்து மடிப்புளதாம் அடுத்தார் மானம்

நொடியேனும் அகலாது காக்குங் கண்டாய்
நுவலுகலை கற்றுய்ந்து புகழ்வா யேழு
படியேறும் படிவளர்த்த சிவஞா னேந்த்ரா
பயன்கதைக்குப் பகர்ந்தெம்மைப் பாலிப்பாயே.”

[கொடி - வேட்டி காயவைக்கும் கொடி. பிஞ்சவிடும் - கிழிந்துபோகும். காயும் - உலரும். துவையல் செய்தால் - துவைத்தால். கசக்குதல் - துணி கசக்குதல்.]

சேற்றூர்ப் புலவர்கள்மீது பாட்டு

இவர் சேற்றூருக்குச் சென்றார். இராமசாமிக் கவிராயர் கந்தசாமிக் கவிராயர் ஆகியோர் இவரைப் பாராட்டி இவர் நாடிச்சென்ற காரியத்தை நிறைவேற்றினர். அதனைக் குறித்துத் தமது நன்றியைச் செய்யுள் மூலமாக வெளிப்படுத்தினார். பிறகு முகவூரில் கந்தசாமிக் கவிராயரால் அமைக்கப்பெற்ற பிள்ளையார் கோவிலுக்குச் சென்றார். அங்கு இவரைப் பாராட்டிப் போற்றினர். இனிய மாங்கனிகளை அளித்து உண்ணச் செய்தனர். மாங்கனியை உண்டு கொண்டே,

“ கந்தசா மிக்ககவிவல் லவனுமவன்
கனிட்டனெனக் கற்றோர் போற்ற
வந்தசா மியையனைய இராமசா
மிக்கவியும் மகிழ்வாய் எற்குத்
தந்தசா மியமகன்ற மாங்கனித்தித்
திப்பினைநேர் சாற்ற வேண்டில்
பந்தசா மியல்பகற்றும் அரன்மகற்கீ
கனியுமிணை பகரொண் ணாதே.”

என்று செய்யுளொன்று பாடினார். இவருடைய பாடல்களைக் கேட்டு மகிழ்ந்த சுப்பிரமணியக் கவிராயர், (இராமசாமிக் கவிராயருடைய மகன்)

" தனிக்கவிகைப் படையாக்கொண் டவன்பணியும்
சிவன்திருப்பா தத்தை யென்றும்
உனிக்கவியு மால்சரவ ணப்பெருமாட்
கவிச்சிங்கம் உவந்தன் பாக
இனிக்கவிகை மன்னரெலாம் கொண்டாட
எந்தையர்மீ திசைத்த செஞ்சொல்
கனிக்கவிபோல் இனிக்கவினிக் கவிபுகல்வோர்
இவ்வுலகிற் கண்டி லோமே."

என்று பாராட்டிப் பாடினார். இவருடைய பெருமை அந் நாளில் எங்குஞ் சிறந்து விளங்கியது.

### இயற்றிய நூல்கள்

1. மதுரைச் சிலேடை வெண்பா
2. குன்றக்குடிச் சிலேடை வெண்பா
3. கந்தவருக்கச் சந்த வெண்பா
4. திருச்சுழியல் ஒரெழுத்தந்தாதி
5. மகரவந்தாதி
6. கழுகுமலை ஒரெழுத்தந்தாதி
7. பனசைத்திரிபந்தாதி
8. கயற்கண்ணிமாலை
9. புவனேந்திரன் அம்மானை

முதலிய நூல்கள் இவரால் இயற்றப்பெற்றன.

### இறுதி

சிறந்த புலமைபெற்று விளங்கிய இவர் 1888-ஆம் ஆண்டில் இவ்வுலக வாழ்வைத் துறந்தார்.

---

## உ௪. மகாவைத்தியநாதையர்

### தோற்றம்

தஞ்சைமாவட்டத்திலே தஞ்சைக்கு அணித்தாக உள்ள வையைச்சேரி என்னுஞ் சிற்றூரிலே வைத்திய நாதையர் 1844-ஆம் ஆண்டில் பிறந்தார். தந்தையாருடைய பெயர் துரைசாமி ஐயர். வைத்தியநாதையருக்கு உடன்பிறந் தாரும் மூவர் தோன்றினர். அவர்களில் இருவர் மூத்தவர். ஒருவர் இளையவர். மூத்தவர்களில் ஒருவராகிய இராமசாமி ஐயர் என்பவர் வைத்தியநாதையரோடு எப்பொழுதும் இணைபிரியாதவராக இருந்தார்.

### கல்வி

வைத்தியநாதையர் மிகு இளம்பருவத்திலேயே நல்ல இசைப்புலமையை அடைந்தார். அகவை பத்து நிரம்பு வதற்குள் சங்கிரக சூடாமணி, சங்கீத ரத்திநாகரம் முதலிய இசை நூல்களையும் நன்கு கற்றுத் தேறினர். இவருடைய குரல் மிக இனிமை வாய்ந்ததாக இருந்தது.

### இசையரங்குகள்

வைத்தியநாதையர் பத்தாவது அகவையிலேயே தம் உடன்பிறந்தாரோடு பல இடங்களிலும் இசையரங்குகளை நடத்தத் தொடங்கிவிட்டார். குரல் மிக இனிமையாக இருந்தபடியால் இவருடைய புகழ் மிகு விரைவாக எங்கும் பரவத் தொடங்கிவிட்டது.

### பல ஊர்களுக்குச் செல்லுதல்

புதுக்கோட்டையில் அந்நாளில் அரசுபுரிந்துகொண் டிருந்த இராமச்சந்திரத் தொண்டைமான் வைத்திய நாதையருடைய இசையருமையைக் கேள்வியுற்றார். இவ ரைத் தம்முடைய ஊருக்கு அழைத்துப் பாடச்செய்து

கேட்க வேண்டும் என்னும் எண்ணம் அவருக்குண்டா கியது. தக்க மனிதர்களை அனுப்பி வரவழைத்தார். பல பெரும் இசைப்புலவர்கள் கூடிய பேரரங்கில் வைத்திய நாதையர் இசைபாடினார். பெரிய பெரிய இசைப்புலவர்கள் எல்லோரும் இவருடைய இசையைக் கேட்டுப் பெரு வியப் படைந்தனர். பலவாறு வாழ்த்துரைகள் கூறி வாழ்த்தி னார்கள். புதுக்கோட்டை மன்னர் மேலும் சிலநாட்கள் இவரை அங்கே பாடச்செய்து இவருடைய பாட்டைக் கேட்டு மகிழ்ந்தார். சிறந்த நன்கொடைகளை வழங்கிப் பாராட்டினார். பிறகு மதுரை இராமநாதபுரம் முதலிய இடங்கட்குச் சென்று இசையரங்கு நடத்தினார். இராம நாதபுரத்தில் மூன்று திங்கள்களுக்குமேல் தங்கியிருந்து இசையரங்கு நிகழ்த்தினார். இவர் இசையரங்கு நிகழ்த்திய ஒவ்வொரு நாளும் பெருந் திருவிழாவாகவே இருந்தது. முத்துராமலிங்க சேதுபதி வைத்தியநாதையரையும் இராம சாமி ஐயரையும் புகழ்ந்து பாராட்டித் தக்கவாறு நன் கொடைகள் வழங்கினார். பிறகு எட்டையபுரம், திரு நெல்வேலி முதலிய ஊர்களுக்குச் சென்று இசையரங்குகள் நிகழ்த்திப் பெரும்புகழும் சிறப்பும் பெற்றார்.

### மகா என்னுஞ் சிறப்புப்பெயர்

வைத்தியநாதையர் இவ்வாறு பலவிடங்களினும் தமது திறமையைக் காட்டிக்கொண்டு கல்லிடைக்குறிச்சிக்குச் சென்றார். அப்போது கல்லிடைக்குறிச்சியில் திருவாவடு துறையாதீனத்தின் இளவரசாகிய சுப்பிரமணிய தேசிகர் இருந்தார். அவர் வைத்தியநாதையருடைய இசைப் பெருமையைப்பற்றிப் பலராலுங் கேள்விப்பட்டு அவரது இசையைக் கேட்கவேண்டுமென்று எண்ணிக்கொண் டிருந்தார். இவ்வாறு எண்ணிக்கொண்டிருந்த தேசிக

ரிடத்தில் வைத்தியநாதையர் தமது திறமையைக் காட்டி இசையரங்கு நடத்தச் சென்றார். பழம் நழுவிப் பாலில் விழுந்ததுபோல் ஆயிற்று. தேசிகர் ஐயருடைய இசையைக் கேட்டு இன்பக்கடலில் மூழ்கினர். தக்கவாறு நன்கொடைகள் வழங்கியதுடன் அழியாக்கொடை ஒன்றும் அளிக்க வேண்டும் என்று எண்ணினர். ஒருவருக்கு ஒரு துறையில் தேர்ந்தவர் என்று சிறப்புப்பெயர் வழங்கவேண்டுமென்றால் அத்துறையில் தேர்ச்சிபெற்ற பலரையும் ஒருங்கு சேர்த்து அவர்கள் அனைவரும் ஒப்புக்கொள்ளத்தக்க முறையில் சிறப்புப்பெயரை வழங்குவதுதான் சிறந்ததாகும். அவ்வாறின்றித் தனிமையில் வைத்து வழங்கிவிடின் பிறகு அத்துறையில் வல்லவர்கள் குறை கூறற்கு ஏது நேரிடலாம். சுப்பிரமணிய தேசிகர் இதனை நன்குணர்ந்திருந்தார். ஆகவே அந்நாளில் இசைத்துறையில் சிறப்புற்றிருந்த பெரிய வைத்தியநாதையர், சின்ன வைத்தியநாதையர் முதலிய இசைப்புலவர்கள் பலரை ஒருங்கு சேர்த்துப் பேரவை ஒன்று கூட்டினர். அங்கு இசைப்போட்டியும் நடைபெற்றது. இசைப்புலவர்கள் பலருந் தனித்தனியே பாடினர். தஞ்சை வைத்தியநாதையருடைய இசையே எல்லோருடைய இசைக்கும் தலைமைபெற்று நின்றது. பெரிய வைத்தியநாதையருடைய உடன்பாட்டையும் பெற்றுத் தேசிகர் இவருக்கு "மகா," என்னுஞ் சிறப்புப் பட்டத்தை வழங்கினர். அஃது இவருடைய பெயரோடு இசைந்து மகா வைத்தியநாதையர் என்று வழங்குமாறு நின்றது. "இவருக்கு இத்தகைய சிறப்புப்பெயர் வழங்கியது தகும்; தகும்," என்று அங்குக் கூடியிருந்த எல்லோரும் ஒரு முகமாக ஒப்புக்கொண்டனர். அப்பொழுது அங்கிருந்த வித்துவான் தாண்டவராயத் தம்பிரான் தாம் அடைந்த மகிழ்ச்சியை இரண்டு கட்டளைக்

கலித்துறைகள் மூலம் தெரியப்படுத்திக் கொண்டார்.* சிறப்புப்பெயர் பெற்ற பின்னர் மேலுஞ் சிலகாலம் மகா வைத்தியநாதையர் சுப்பிரமணிய தேசிகர் விருப்பப்படி கூடத் தங்கியிருந்தார். திருநெல்வேலி முதலிய இடங் கட்குச் சென்று இசையரங்குகள் நடத்தினர். அக்காலத் தில் இவருக்கு அகவை பன்னிரண்டு என்பர்.

**சைவ நூல் கற்றல்**

மகா வைத்தியநாதையர் இளமை முதற்கொண்டே சிவபெருமானிடத்தில் பேரன்புடையவராக இருந்தார். நாள்தோறும் மாலையில் திருக்கோவிலுக்குச் சென்று சிவ வழிபாடு செய்வதற்கும் காலையில் சிவபூசை செய்வதற்கும் ஒருநாள்கூடத் தவறமாட்டார். கோடக நல்லூர்ச் சுந்தர அடிகள் என்னும் பெரியாரிடத்தில் மறைமொழி கேட் டலையும் (மந்திரோபதேசத்தையும்) முறைப்படி பெற் றிருந்தார். அன்றியும் அவ்வடிகளாரிடம் சதுர்வேத தாற் பரிய சங்கிரகம், சிவதத்துவ விவேகம், சூதசம்மிதை முதலிய வடமொழி நூல்களையும் பாடங் கேட்டார். மற்றும் பலரிடத்தில் பல வடமொழி நூல்களைப் படித் துணர்ந்தார். இதனால் இவருக்கு வடமொழி, சைவ நூல்கள் முதலியவைகளில் நல்ல பயிற்சி யுண்டாயிற்று. சிவத்தொடர்புடைய கதைகளை இசையுடன் சொற்பொழிவு செய்யவுந் தொடங்கினர். இவருடைய இசையரங்கு அல்லது சிவகதைச் சொற்பொழிவுகள் எங்கு நடைபெற் றாலும் அங்கு எண்ணற்ற மக்கள் கூடுவர்.

**பெரும்புலவர் நட்பு**

பெரும்புலவர் மீனாட்சி சுந்தரம்பிள்ளையவர்களைப்பற்றி மகா வைத்தியநாதையரும் இராமசாமி ஐயரும் கேள்விப்

---

* இப் பாடல்களைத் தாண்டவராயத் தம்பிரான் வரலாற்றிற் காண்க.

பட்டு அவரைப் பார்ப்பதற்கு அவா மிக்குடையவர்களாக இருந்தார்கள். இவ்வாறே இவர்கள் இருவருடைய இசைப் பெருமையைப் பற்றியும் பெரும்புலவர் பிள்ளையவர்கள் கேள்விப்பட்டு இவர்களைப் பார்க்க விரும்பியிருந்தனர். ஓராண்டு திருவாவடுதுறையிலே தைத்திங்களிலே குரு பூசை நிகழ்ந்தது. இருபாலாருடைய எண்ணமும் இனிது நிறைவேறியது. சுப்பிரமணிய தேசிகர் இவர்களை ஒருவருக் கொருவர் அறிமுகப்படுத்தி வைத்தார். அங்கு இசை யரங்கு நிகழ்ந்தது. மகா வைத்தியநாதையருடைய இசை யைக்கேட்ட பிள்ளையவர்கள் வியந்து பாராட்டினர்.

"பொருவில்மகா வைத்தியநா தன்பாடும்
இசைப்பெருஞ்சீர் பொருவான் எண்ணின்
ஒருவிலருட் டுறைசையெங்கள் குருமணியம்
பலவாணன் ஒளிர்கூ டற்கண்
வெருவில்சிறப் புறமுனம்பா டிசைப்பெருஞ்சீ
ரேபொருவும் விருத்த ரூபம்
மருவிலனிந் தன்ச்சுமையும் எடுத்திலன்வேற்
றுமையிவையே மதிக்குங் காலே."

"அனைநிகர்சுப் பிரமணிய மணியொடுமா
வடுதுறையில் அமரா நின்ற
தனைநிகரம் பலவாண பரமசிவன்மற்
றெங்கள்குரு சாமி மேன்மேல்
புனையும்வயித் தியநாதன் இசைவிரும்பி
னன்இதுவும் புகழோ என்னின்
இனையன்வயித் தியநாதன் இசைவிரும்பல்
பரம்பரையில் இயைந்த வாறே."

என்று பாடல்களை இயற்றிப் புகழ்ந்தார். அந்நாள்முதல் மகா வைத்தியநாதையரும் பெரும்புலவர் பிள்ளையவர்களும் நெருங்கிய நட்புமிக்கவர்களாக விளங்கினர்கள். மகா வைத்தியநாதையர் சிருங்ககிரி சங்கராச்சாரியர் முதலிய பெரியோர்களாலும் போற்றிப் பாராட்டப் பெற்றார்.

### மைசூர் செல்லுதல்

இவருடைய இசைப்பெருமை மைசூர் மன்னருடைய காதுகட்கும் எட்டியது. அவர் இவரை யழைத்து இசை யரங்கு நடத்தச்செய்து தக்கவாறு நன்கொடைகள் வழங்கிச் சிறப்புச் செய்தார். மைசூரில் இருந்த செல்வர் களும் இவரைக்கொண்டு இசையரங்குகள் நடத்திச் சிறப் புக்கள் செய்தனர்.

### இரங்கற்பாக்கள்

1876-ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்களில் பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இவ்வுலக வாழ்வைத் துறந்து இறைவன் திருவடிநீழலை எய்தினார். அப்பொழுது மகாவைத்தியநாதையர் தம்முடைய உடன்பிறந்தாரோடு இசையரங்கு நடத்தற்கு ஓர் ஊருக்குச் சென்றிருந்தார். அவ்விடத்தில் பிள்ளையவர்கள் காலமான செய்தி தெரிந் தது. இருவரும் மிகவும் வருந்தி இரங்கற்பாக்கள் பாடினர். மகாவைத்தியநாதையர்,

" தூவலரும் மீனாட்சி சுந்தரப்பேர் கொண்டிலகும்
நாவலர்பி ரானரன்தாள் நண்ணினன் ஞானிடத்தே
ஆவலரா மாணவகர் ஆரிடத்தே தமிழ்பயில்வார்
சேவலர்பி ரான்புகழ்சால் செழுங்கவியாப் பவர்எவரே.

" விண்ணாடும் பெருங்கவிஞன் மீனாட்சி சுந்தரவேள்
மண்ணாத மணியனையான் மாதேவன் மலரடிசார்ந்
துண்ணானின் றனனின்பம் உலப்புறுவார் மாணவரென்
றெண்ணானின் றனன்இலையே என்னே இவ் வுலகியல்பே."

என்னும் பாடல்களால் தமது ஆற்றாமையைப் புலப்படுத் தினர்.

### புகழ்ப்பாட்டு

திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த வேணுவன லிங்கத் தம்பிரான் என்பவர் செவ்வந்திபுரம் என்னும்

ஊரில் ஒரு திருமடங்கட்டினர். அதற்குச் 'சுப்பிரமணிய தேசிக விலாசம்' என்று பெயரிட்டார். சுப்பிரமணிய தேசிகரை அங்கு அழைத்துச் சிறப்புக்கள் செய்தார். அப் பொழுது தேசிகருடன் சென்றிருந்த மகாவைத்தியநாதை யர் முதலியோர் அம் மடத்தைப் புகழ்ந்து பல பாடல்கள் பாடினர்கள். அப்பொழுது இவர்,

"மும்மையால் உலகாண்ட மூர்த்தியார்
முன்செய்பணி முட்டும் வண்ணம்
வெம்மையார் ஓர் அரசால் விளைந்ததெனும்
சொன்மாற விடைநீத் தீசன்
இம்மையார் பலவரசும் படர்பதிச்சுப்
பிரமணிய இறையாய் மும்மைச்
செம்மையார் வேணுவன லிங்கன்செய்
திருமடத்தில் திகழ்ந்தற் றனல்."

என்னும் அறுசீர் விருத்தப்பாடலைப் பாடினர்.

தேசிகர்மீது இரங்கற்பா

இவருக்கு மகா என்னும் சிறப்புப்பெயரை வழங்கி, இவருடைய புகழ் எங்கும் பரவுவதற்குக் காரணமாக இருந்த சுப்பிரமணிய தேசிகர் 1888-ஆம் ஆண்டில் இறை வன் திருவடி நீழலை யடைந்தார். அப்பொழுது மகா வைத் தியநாதையர் பெரிதும் வருந்தி பல இரங்கற்பாக்கள் பாடினர்.

"ஏரளித்த வடமொழிதென் மொழியளித்தாய் இசையளித்தாய்
சீரளித்த துறைசையிற்சுப் பிரமணிய தேசிகநின்
நாரளித்த பேரவைக்கண் மகாவைத்ய நாதனெனும்
பேரளித்தாய் எங்களைவிட் டெங்கொளித்தாய் பேசுகவே."

என்பது அவற்றுள் ஒன்ருகும்.

இறுதி

தமிழ் நாட்டு மக்களாலும் அரசர்களாலுமே யல்லா மல், திருவிதாங்கூர் மைசூர் முதலிய நாட்டு மக்களாலும் அரசர்களாலும் செல்வர்களாலும் போற்றிப் பாராட்டப் பெற்ற இவர் சிவபெருமான்மீது பேரன்புடையவராக விளங் கினர். 1893-ஆம் ஆண்டில் இவருக்கு நோயுண்டாயிற்று. அப்பொழுது இவருடைய குடும்பம் வறுமையால் தளர்ச்சி யடையாமல் சேது வேந்தர் முதலியோர் உதவிபுரிந்தனர். பெரிய இசையறிஞராக விளங்கிய இவர் நீண்ட வாழ்நாளைப் பெற்றிருக்கவில்லை. 1893-ஆம் ஆண்டு சனவரித் திங்கள் இருபத்தேழாம்நாள் தம்முடைய 49-ஆம் அகவையிலே இவ் வுலக வாழ்வைத் துறந்து சிவபெருமான் திருவடிநீழலை யடைந்தார். இசையுலகம் பெறுதற்கரிய மாணிக்கத்தை இழந்தோமே என்று பெரிதும் கலங்கி வருந்தியது. இவரு டைய தமையனாராகிய இராமசாமி ஐயர் இரங்கற்பாக்கள் பாடி வருந்தினர்.*

---

## உரு புலிக்குட்டி இராமலிங்கத் தம்பிரான்

தோற்றம்

பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, தியாகராசச் செட்டியார் முதலியவர்கள் வாழ்ந்திருந்த காலத்திலே திரு வாவடுதுறை ஆதினத்தில் புலிக்குட்டி இராமலிங்கத் தம்பி ரான், ஆதீனத் தம்பிரான்களுள் ஒருவராக இருந்தார். ஆதீனத் தலைவர்களிடமும் வேறு சிலரிடமும் கல்வி கற்றுச் சிறந்த புலமையடைந்து விளங்கினர்.

---

* இரங்கற்பாக்களை இராமசாமி ஐயர் வரலாற்றில் காண்க.

புலிக்குட்டி

இவருக்குப் புலிக்குட்டி என்னும் அடைமொழி எவ்வாறு வந்ததென்று தெரியவில்லை. இவர் மிகுந்த வெகுளியுடையவர். தமக்கு ஆகாத செயல்களைப் புரிந்தவர்கள்மீது வசைப் பாட்டைப் பாடிவிடுவார். இவர் ஆதீனத் தலைவர்களுடைய பெருஞ் சினத்திற்கு உள்ளாகி அடிக்கடி ஆதீனத்தை விட்டு அகற்றப்பட்டார். இவர் பொருட்டுத் தியாகராசச் செட்டியார், மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் முதலியோர் அடிக்கடி ஆதீனத் தலைவர்களிடம் பரிவு மொழி கூறி மீண்டும் ஆதீனத்திற் சேர்த்துக்கொள்ளச் செய்தனர்.

பாடல்கள்

ஒருமுறை இவர் சுப்பிரமணிய தேசிகருடைய சினத்திற்கு ஆளானார். தேசிகர் ஆதீனத்தைவிட்டு இவரை வெளியேறுமாறு கட்டளையிட்டுவிட்டார். உடனே இவர், "சுப்பிரமணிய தேசிக சிந்தாமணியே! பேரறிஞர்கள் நிரம்பிய பேரவைக்கண் அடியேனை அழைத்து நடுவிலே இருக்கச் செய்து, 'பெருநாவலர்காள்! இவன் கற்பனையாகக் கவிகள் பாடுவதில் காளிதாசனைப் போன்றவன்.' என்று கூறி நான் பாடிய பாடல்களை யெல்லாம் அங்குச் சொல்லுமாறு செய்து அப்புலவர்களைப்போல நீயும் வியக்கும் பெரும்பேற்றை அடியேன் அடையாமல் நெடுந்தொலையில் இருப்பதே பெரிய தண்டனை யன்றோ? இதன்மேலுங் கொடிய தண்டனை யாதிருக்கின்றது? கோமுத்தியை (திருவாவடுதுறை) அடைந்த நான் எமனுடைய ஊருக்கு (தருமபுரத்திற்கு) எவ்வாறு போவேன்? சொக்கபுரம் ஒரு பொருளாகுமோ? துறவியான எனக்குச் சிறிய குடிவாழ்க்கைமேல் (குன்றக்குடியில்) நெஞ்சம் பொருந்

துமோ? கூடலும் (மாதர் சேர்க்கை, மதுரையாதீனம்) ஆகுமோ," என்னும் பொருளமைந்த,

"வாசமலர்வாய் திறந்தென்னை வாவென்
றழைத்துப் படித்தோர்கள்
மல்கும் சபையின் நடுவிருத்தி
மாநா வலர்காள் இவன்காளி
தாசன் அனையான் கற்பனைப்பாச்
சாற்றும் வலிமை யாலென்று
தமியேன் புகன்ற கவிமுழுதும்
சாற்றக் கேட்டப் பெருஞ்சபையில்
நேச அந்தப் பாவலர்போல்
நீயும் வியக்கும் பெரும்பேறு
நீச னேன்பெற் றுய்யாமல்
நெடுந்தூ ரத்தில் இருப்பதுவே
ஈச பெருந்தண் டனையன்றோ
இதன்மே லுந்தண் டனையுண்டோ
இசைப்பாய் குருசுப் பிரமணிய
எந்தாய் அருட்சிந் தாமணியே.

"கோமுத்தி அடைந்தேன்முன் தருமபுரம்
எவ்வா று குறுகு வேன்பின்
தோமுற்ற சொக்கபுரம் இதுவுமொரு
பொருளாமோ துறவியானேற்(கு)
ஏமுற்ற குன்றக் குடிவாழ்க்கை
மேல்நெஞ்சம் இசையு மோசொல்
காமுற்ற கூடலுந்தான் ஆமோசுப்
பிரமணிய கருணைக் குன்றே"

என்ற செய்யுட்களை எழுதியனுப்பினர்.

திருவாய்

ஆதீனத்து ஓதுவார் ஒருவருக்கும் இவருக்கும் ஏதோ பகைமைமூண்டு வாய்ப்போர் உண்டாகிவிட்டது. புலிக் குட்டி ஓதுவாரை வாய்க்கு வந்தவாறு இகழ்ந்து பேசத்

தொடங்கிவிட்டது. உடனே ஓதுவார், "சரிதான் சரிதான் போதும் திருவாயை மூடியருளட்டும்," என்று இகழ்ச்சிக் குறிப்புத் தோன்ற உரைத்தார். உடனே இவருக்குச் சீற்றம் மேலும் மிகுதியாகிவிட்டது.

"செந்தமிழ்பா டும்வாய் திருவாய்மற் றெவ்வாயும்
நிந்தை மலஞ்சொரிவாய் நீர் சொரிவாய்—முந்தவே
நாறும்வாய் யாரும் நகைக்கும்வாய் மூடனே
தேறுவாய் இச்சங்க தி"

என்று, வசைப்பாட்டு ஒன்றை வீசினர்.

முத்துக்கறுப்பன்

மற்றொரு சமயத்தில் முத்துக்கறுப்பன் என்னும் பெயருடையவன் ஒருவனுக்கும் இவருக்கும் வாய்ப்போர் மூண்டது. அப்பொழுது இவர்,

"முத்துக் கறுப்பனென்று முன்னுனக்குப் பேரமைத்த
பித்தனர் என்னிடத்தில் பேசுவாய்—முத்துக்
கருக்குமா மூடாநீ கற்றிருந்தும் பேரைத்
திருத்திவைக்க லாகாதோ சீ."

என்று இகழ்ந்து பாடினர். இவர் வெகுளியுடையவராக இருந்தும் இனிய செய்யுட்களைப் பாடும் அறிவாற்றலை நன்கு பெற்றிருந்தமையின் பலரும் இவரிடத்தில் நன்மதிப்புக் காட்டினர்கள்.

இரங்கற்பா

ஆதீனத் தலைவராக அமர்ந்திருந்த சுப்பிரமணிய தேசிகர் காலமானபோது இவர் பல இரங்கற்பாக்களைப் பாடி வருந்தினர். அவற்றுள் இரண்டைக் கீழே காண்க.

"தனைநிகர்க்குந் துறைசையிற்சுப் பிரமணிய
எங்கள்குரு சாமி யாங்கள்
உனை யிழந்த பெருந்துயரப் பிணியினால்
உயிர்நீங்கி ஒழியா துய்ய

அனையபிணி ஒழித்தருளம் பலவாண
குருமணியை அளித்த வாற்றால்
இனைவற நீ என்றும் எங்கள் பால்வைத்த
பெருங்கருணை என்னே என்னே!

"மருந்தனைய துறைசையிற்சுப் பிரமணியே
எங்கள்குரு மணிநீ நீங்கும்
பெருந்துயரக் கடல்நடுவே யாங்கள்விழுந்
திறவாது பிழைக்கு மாறு
பொருந்தியவக் கடல்கடத்தி அருள்புகழம்
பலவாண புனிதன் என்னும்
திருந்தியநற் புணையளித்தாய் நினக்கென்ன
கைம்மாறு செய்வோம் ஐயா."

**இறுதி**

இவர் தனிப்பாடல்கள் பலவற்றைப் பாடியதன்றி நூல்கள் செய்ததாகத் தெரியவில்லை. 1893-ஆம் ஆண்டில் இவ்வுலக வாழ்வைத் துறந்து, இறைவன் திருவடிநீழலை அடைந்தார்.

---

## உ௬. சுந்தரதாசப் பாண்டியர்

**தோற்றம்**

திருநெல்வேலி மாவட்டத்திலேயுள்ள சேற்றூரிலே சுந்தரதாசப் பாண்டியர் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் முத்துசாமித்துரை. இவர் புலவர் பாடும் புகழுடையாராக நிலவிப் பல புலவர்களைப் போற்றி யாதரித்து அவர்களால் புகழ்நூலும் பாடப்பெற்ற தகைசால் பெரியார்.

**கல்வி**

தம் புதல்வரைப் புலவராக்க வேண்டும் என்னும் எண்ணம் தந்தையாருக்குண்டாகியது. அந்நாளில் முக

ஊரில் புகழ்பெற்று விளங்கிய இராமசாமிக் கவிராயர் சேற்றூர்ச் சமத்தானப் புலவராக விளங்கியிருந்தார். அவரைக் கொண்டே முத்துசாமித்துரை தம் மைந்தருக்குக் கல்வி கற்பிக்கச் செய்தார். இராமசாமிக் கவிராயர் இலக்கண இலக்கியங்களைத் தெளிவுபெறக் கற்றுப் பெரும் புலவராக மிளிர்ந்த பெற்றிமிக்காராதலின் சுந்தரதாசுத்துரை கவிராயர்பால் அரிய கல்வியை உயரிய முறையில் கற்றூர். தம் ஆசிரியராகிய இராமசாமிக் கவிராயரைப்போலவே செய்யுள் பாடும் ஆற்றலும் சொற்பொழிவு செய்யுந் திறனும் சுந்தரதாசுத் துரைக்கும் நன்கு உண்டாயின.

புலவர்களைப் போற்றுதல்

தந்தையாருக்குப்பின் தாம் நாட்டுரிமையை மேற்கொண்டபிறகு, தந்தையாரைப்போலவே புலவர்களைப் போற்றி யாதரிக்கும் சீரிய வள்ளன்மையை மேற்கொண்டார். இராமசாமிக் கவிராயராகிய ஆசிரியரையும் மற்றும் பல புலவர்களையும் தமது அண்மையில்வைத்து ஆதரித்து அவர்களோடு கலையாராய்தலில் ஈடுபட்டதோடு தம் பெருமையைப் புகழ்ந்து பாடி வருவாரின் பாவின் பண்பையும் சீர்தூக்கித் தக்கவாறு நன்கொடை வழங்கினர்.

செய்யுள்பாடுந் திறன்

செய்யுள் பாடுந் திறம் நன்கு அமையப்பெற்ற இவர் தம்ஊரிற் கோயில்கொண்டுள்ள இறைவன்மீது செய்யுட்கள் பல பாடினர். அவைகள் சொற்செறிவும் பொருட்செறிவும் நன்கு அமையப்பெற்று இனிமை பொருந்தியவை.

“ ஆசையே பெருக்கி மோசமே கிளைக்க
அன்பனு ராகமே விளைத்துக்
காசையே விரும்பு கனக்குழல் மடவார்
கண்வலைப் படாதுநின் புகழைப்

பேசியே உருகி நேசமே கனியும்
பேரறிவென் றருள் புரிவாய்
மாசிலா மணியே கருணைவா ரிதியே
வளமிகு சேறைநா யகனே."

என்பது சேற்றாரில் எழுந்தருளிய நச்சாடை தவிர்த்தவர் மீது பாடப்பட்ட பாடல்களில் ஒன்றாகும்.

**சிவப்பதிக் கவிகள்**

இவர் சிவப்பதிகள் பலவற்றிற்குச் சென்று இறை வழிபாடு செய்தார். தாம் சென்ற ஒவ்வோரூர்க் கோயி லிலும் எழுந்தருளிய இறைவன்மீது ஒவ்வொரு செய்யுள் உரைத்தார்.

"மருவாரூர் பொடியாக அசுரர்குலம் முடிவாக
வானோர்க் கின்பம்
தருவாரூர் தியும்விடையாய்த் தாங்கியமா
லறியாதார் தமையே போற்றி
வருவாரூர் வனமுதலாம் பலபிறப்பில்
உழலாது மாற்றி வைப்பார்
திருவாரூர்த் தியாகேசர் எனதுநெஞ்சே
எப்போதுஞ் சிந்திப் பாயே."

என்பது திருவாரூரில் இயற்றியதாகும். திருவிழாச் சமயத் திலும் மற்றைச் சமயங்களினும் காலத்தையும், இடத்தை யும் நோக்கிப் பல செய்யுட்கள் பாடியுள்ளார். அவைகள் தனிச்செய்யுட் சிந்தாமணியிற் சேர்க்கப்பட்டுள்ளன.

**திருவனந்தபுர அரசர்மீது வண்ணம்**

இவர் காலத்தில் திருவனந்தபுரத்தில் அரசராக இருந்த இராமவர்மா என்பவருக்கும் இவருக்கும் நட்பு ஏற்பட் டிருந்தது. சுந்தரதாசப் பாண்டியர் இராமவர்மாமீது வண்ணம் ஒன்று பாடினர். பெரும்புலவர் ஒருவரிட மிருந்து சிறப்புப்பாயிரம் பெறவேண்டு மென்பது இவ

ருடைய எண்ணமாக இருந்தது. சேற்றார்ப் புலவர்கள், "திருவாவடுதுறை ஆதீனத்தில் உள்ள பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடமிருந்து பெற்றால் மிக நன்றாக இருக்கும். அவர் மிகப் புகழ்பெற்ற பெரும் புலவர்," என்று கூறினார்கள். சுந்தரதாசப் பாண்டியர் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களிடமிருந்தே பெறுவதென்று முடிவுசெய்தார். பெரும்புலவர் பிள்ளையவர்கட்கும் இவருக்கும் முன்பழக்கம் இல்லை. பழக்கம் இல்லாமலிருக்கும்போது கேட்டால் கொடுக்கிறாரோ இல்லையோ என்று தயங்கினார். பிறகு வண்ணத்தை ஆதீனத்தலைவர் சுப்பிரமணிய தேசிகருக்கு அனுப்பி எண்ணத்தையுந் தெரியப்படுத்தினார். சுப்பிரமணிய தேசிகர் பிள்ளையவர்களிடம் வண்ண நூலைக் கொடுத்து, "சுந்தரதாசப் பாண்டியர் நல்ல அறிவாளி. அவர் வண்ணத்திற்குச் சிறப்புப் பாயிரம் கொடுக்கவேண்டும்" என்று கூறினார். பிள்ளையவர்கள் தேசிகருடைய திருவுளப்படி ஐந்து பாடல்களைச் சிறப்புப்பாயிரமாகப் பாடிக் கொடுத்து அனுப்பச் செய்தார். சிறப்புப்பாயிரத்தைப் பெற்ற சுந்தரதாசப் பாண்டியர் மிகுந்த மகிழ்ச்சியடைந்து பிள்ளையவர்கட்கு நன்றியறிவிப்பாகச் சில செய்யுட்கள் எழுதியனுப்பினார்.

சொற்பொழிவாற்றல்

செய்யுள் இயற்ற நன்கு பழகியிருந்ததைப் போன்றே சொற்பொழிவு செய்வதற்கும் இவர் நன்கு பழகியிருந்தார். திருக்குற்றாலத்திற்குச் சென்றிருந்த இடத்தில் பாரதச் சொற்பொழிவு ஒன்று நிகழ்த்தினார். சொற்பொழிவு மிகவுஞ் சிறந்ததாக இருந்தது. அப்பொழுது இவருடைய ஆசிரியராகிய இராமசாமிக் கவிராயரும் உடனிருந்தார். அவர் இவருடைய சொற்பொழிவைப் பாராட்டி,

"திடபுருட சிங்கம்எங்கள் சுந்தரதா
　　சேந்திரன்தான் செயும்பி ரசங்கம்
வடவருவி என்பரது மேற்போமா
　　செவிக்கினிக்கு மாமுந் நீர்சூழ்
புடவியெங்குந் தொனித்திடுமா பன்னூலை
　　ஆராய்ந்த புலவீர் என்றும்
உடலழுக்கை ஒழிப்பதன்றி அகத்தழுக்கை
　　ஒழித்திடுமா உரைசெய் வீரே"

என்னும் இப்பாடலைச் சொல்லத் தொடங்கி, 'உட லழுக்கை' என்று கவிராயர் சொல்லும்போதே மேற் கொண்டு அவர் சொல்லப்போகிற செய்தியைச் சுந்தரதாசர் ஊகித்துணர்ந்துகொண்டு, "சபாசு" என்று கூறினர். பெருநிலக்கிழாரின் நுண்ணுணர்வை எண்ணி மகிழ்ந்த கவிராயர்,

"முன்னம்உப ரங்கமன்னன் கவிகேட்டுச்
　　சிரமசைப்பு மொழியும் லக்கம்
பொன்னெனச்சொல் லும்புலவீர் சுந்தரதா
　　சேந்திரனைப் போலப் பாவின்
பின்வருங்கற் பனையிஃதென் றறிந்துசபா
　　சென்பதுண்டோ பேசுங் காலிம்
மன்னரிரு வரிலெவரே தமிழ்த்திறமுற்
　　றுந்தெரிந்தோர் சாற்று வீரே."

என்று புகழ்ந்து கூறினர். மற்றும் பல புலவர்கள் இவருடைய சொற்பொழிவுத்திறன் முதலியவைகளைப் பாராட்டிப் புகழ்ந்திருக்கின்றனர். கல்போது பிச்சுவையர் இவர்மீது இயற்றிய விடுகதைப் பாடல்கள் வேடிக்கை யானவை.

இறுதி

சிறந்த கல்விமானாக விளங்கிய இவர் 1895-ஆம் ஆண்டு இவ்வுலக வாழ்வை நீத்தார். அப்போது இவ ருடைய ஆசிரியராகிய கந்தசாமிக் கவிராயர்,

"கல்லாத கலையிலையென் றெக்கலையுங்
கற்றதனால் கனவி லும்பொய்
சொல்லாமை முதலாநற் குணநிறைசுந்
தரதாசுத் துரையை இந்நாட்(டு)
எல்லாருங் கவலுறக்கொல் அந்தகனே
உனைநடுவன் என்னும் வார்த்தை
பொல்லாத விடப்பாம்பை நல்லபாம்
பென்பதொப்பாம் பேசுங் காலே.

"இந்திரன்சுந் தரதாசன் தனக்கெதிராப்
புலிகரடி எதிர்த்துப் பாய
வந்தவையெல் லாம்செயித்த வல்லவன்இச்
சமன்எருமை மாட்டுக் காரன்
அந்தகன்ஓர் காலன்இவன் தனைச்செயிக்கின்
நமதாண்மைக் கழகா என்று
சிந்தையில்எண் ணினன்அதனால் செயித்தான்இன்
றேல்அவன்என் செயவல் லானே."

என்பன முதலிய இரங்கற்பாக்களைப்பாடி உள்ளம் வாடினர். மற்றைப் புலவர்களும் இவர்மீது இரங்கற்பாப் பாடியேங்கினர். "பூவின் கிழத்தி பொருந்திய இடத்தில் நாவின் கிழத்தி நாடுதல் செய்யாள்," என்னும் மொழியைப் பொய்யாக்கியவர்களில் இச்சுந்தரதாசப் பாண்டியரும் ஒருவராவர்.

---

## உஎ. ச. மு. கந்தசாமிப்பிள்ளை

### தோற்றம்

இவர் தென்னார்க்காடு மாவட்டத்திலே காரணப்பட்டு என்னும் ஊரிலே தோன்றினார். இவருடைய தந்தையார் பெயர் முத்துச்சாமிப் பிள்ளை. குலம் கருணீக குலம். இராமலிங்க அடிகள் காலத்தினராகிய இவர் இராமலிங்க அடிகளாரின் அருமைபெருமையை நன்குணர்ந்து தொண்டு பூண்டொழுகினார். அடிகளாரோடு நெருங்கிப் பழகிய இவர் அடிகளாரின் வரலாற்றுக் குறிப்புக்களை விளக்கமாக எழுதினார். இக்குறிப்புக்கள்தாம் பின்னர் அடிகளாருடைய வரலாறு எழுதுவதற்கு இன்றியமையாத் துணையாயிற்று.

இவர் ஒருமுறை மாயூரத்திற்குச் சென்றார். அப்போது இவருடைய கையிலே இராமலிங்க அடிகள் திருவாய் மலர்ந்தருளிய மகாதேவமாலை இருந்தது. அப்பொழுது அந்நகரிலே வசித்திருந்த பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களைப் பார்க்கச் சென்றார். மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் மகாதேவமாலையை வாங்கிப் படித்துப் பாட்டின் அருமையைப் பெரிதும் பாராட்டினார். இவர் வள்ளலார் இராமலிங்க அடிகளாரையே வழிபடு தெய்வமாகவும் குருவாகவும் கொண்டிருந்தபடியால் இவருக்கு எல்லாஞானமும் எளிதாக உண்டாயின.

### இயற்றிய நூல்கள்

1. வள்ளலார் வரலாறு
2. வரலாற்று இசைப்பாட்டு
3. சுந்தரவிநாயகர் மாலை
4. சாமிமலை சோடச வெண்பா

5. சற்குருவெண்பாவந்தாதி
6. குருநேச வெண்பா
7. கொலைமறுத்தல்
8. சாமிமலை வெண்பா
9. அருட்பிரகாசர் அற்புதவந்தாதி
10. வெறிவிலக்கு
11. வடசிற்சபை மாலை
12. அருட்பிரகாசர் அற்புதமாலை
13. நன்னிமித்தம் பராவல்
14. விபூதிப் பிரசாத மகிமை
15. கிளிக்கண்ணி
16. ஆநந்தக்கண்ணி
17. புலம்பற் கண்ணி
18. பாதார்ச்சனைக் கீர்த்தனை
19. சண்மத சமரசாதீத சித்விலாச நாமாவளி
20. உத்தரஞான சிதம்பர நாமாவளி
21. ஆளுடைய பிள்ளையார் நாமாவளி
22. சடகோபர் நாமாவளி
23. திருவருட்பிரகாச வள்ளலார் நாமாவளி
24. கற்பிலாப் பெண்டிர்
25. கற்புடைப் பெண்டிர்

முதலியன இவர் இயற்றிய நூல்கள். இவருடைய நூலைப் பாராட்டித் தண்டபாணியடிகள், பூவை கலியாண சுந்தர யதீந்திரர், காஞ்சி நாகலிங்க முனிவர், வல்லை சண்முகசுந்தர முதலியார் முதலிய அறிஞர்கள் சிறப்புப் பாயிரம் அளித்துள்ளனர்.

"அந்தண் வடலூரான் அன்பர்களில் சீரியனும்
கந்த சுவாமிக் கவிப்புலவன்—இந்த
உலகத் தினர்மகிழ ஓதுமிசைப் பாடல்
இலகற்குஞ் சாட்சிதெய்வ மே."

என்பது தண்டபாணி யடிகள் பாட்டு.

"குருமொழியே இலக்காகக் கொண்டுசன்
மார்க்கநெறி குலவித் தெய்வ
அருள்நிலையி னில்திளைக்கும் கந்தசா
மிப்பெயரோன் அருளிச் செய்த
திருவளர்சற் குருவெண்பா அந்தாதி
பலவியைந் தேர்ந்து ஞானம்
மருவியசிற் சபையொளிரும் வடலூர்நன்
முனிவரனே மகிழ்வன் மாதோ."

என்பது பூவை கலியாணசுந்தர யதீந்திரர் பாட்டு.

கொலை மறுத்தல்

"ஆண்டவனெல் லாவுயிர்க்குள் ளார்ந்திருப்ப தாயாமல்
ஈண்டரிய இன்னுயிர்கொன் றிட்டாரை—நீண்ட
இருப்புமுட்பிப் பாய்க்குள்ளே ஈட்டியினுல் தள்ளி
உருட்டுவார் தூதுவர்பல் லோர்."

என்பது இவரியற்றிய கொலை மறுத்தற் பாடல்களுள் ஒன்று.

"காலத்தி லேமழை பெய்யாத தால்வருங் கட்டமென்ன
ஞாலத்தி லேவிருத் தாப்பியத் தால்மிகு நன்மைகெட்டக்
கோலத்தி லேவரில் அந்தோஎன் செய்குவன் கூறரிய
சீலத்தி லேநிலைப் பேனேவடல் வருஞ்செவ் வண்ணனே."

என்பது அருட்பிரகாசர் அற்புத அந்தாதிப் பாடல்களுள் ஒன்று.

இவருடைய நூல்களைப் புதுக்கோட்டையைச் சேர்ந்த இராமச்சந்திர புரத்தில் வள்ளலாராக விளங்கியிருந்து காலஞ்சென்ற முத்தையாச் செட்டியார் அச்சிற் பதிப்பித்து வெளியிட்டுள்ளார்.

---

## உ அ. தாண்டவராயத் தம்பிரான்

தோற்றம்

இவர் திருவிடைமருதூரிலேவழிவழியாகச் சைவத்தை மேற்கொண்டொழுகும் சைவ வேளாளர் குலத்திலே தோன்றியவர். வேலூர் சுப்பிரமணிய தேசிகரிடத்திலே மூவகைத் தீக்கைகளையும் முறையே பெற்றுச் சைவத் துறவும், தாண்டவராயத் தம்பிரான் என்னும் தீக்கைப் பெயரும் பெற்றவர். இலக்கண இலக்கியங்களையும் சைவ சித்தாந்த நூல்களையும் திருவாவடுதுறை ஆதீனத்திலே கற்றுத் தெளிந்தார். பிறகு சென்னையில் கோவிந்தப்ப நாய்க்கன் தெருவில் உள்ள திருவாவடுதுறை ஆதீன மடத்திற் சில ஆண்டுகள் தங்கியிருந்தார். அப்பொழுது காஞ்சீபுரம் பெரும்புலவர் சபாபதி முதலியார் சென்னைமாநகரில் புகழ் பெற்று விளங்கினர். பிற்காலத்தில் திருவாவடுதுறை ஆதீன வித்துவான் ஆன மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சென்னைமாநகர்க்கு முதன் முறையாகச் சென்றபொழுது இவரைக் கண்டார். அப்பொழுது இவர் மேற்படி சபாபதி முதலியாரிடம் நூல்கள் சிலவற்றில் இருந்த ஐயங்களைக் கேட்டுக்கொண்டிருந்தார். அந்நாளிற் சென்னையில் இருந்த மழவை மகாலிங்கையர் தம்பிரானுக்கு ஆருயிர்த் தோழராக அமைந்திருந்தார். தம்பிரான் சென்னையை விட்டுத் திருவாவடுதுறைக்குச் சென்றபிறகு மகாலிங்கையர் தம் நண்பராகிய தம்பிரான் பிரிவு குறித்து வருந்தி,

"விரிந்தமக ராலயத்து மின்னுளுக்
கணியாகி மேம்பா டுற்றுப்
பரிந்தசிவ யோகியர்வாழ் துறைசையுளாய்
இருகலையின் பண்பை நன்கு

தெரிந்ததாண் டவராய மாதவசித்
தாந்தமுணர் செல்வா நின்னைப்
பிரிந்ததனால் மணியிழந்த கண்ணது போல்
வாடுகின்றேன் பேதை யேனே."

என்னுஞ் செய்யுளை எழுதியனுப்பினர்.

### பேரூர்ப் புராண உதவி

பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கட்கு நண்பராக அமைந்திருந்த இவர் ஒருமுறை கல்லிடைக்குறிச்சிக்குச் சென்றபோது திரிசிரபுரத்தில் வந்து சிலநாள் தங்கினர். தம்பிரான்பால் அப்போது பேரூர்ப் புராணம் என்னும் நூல் இருந்தது. அதனைப் பிள்ளையவர்கள் உணர்ந்து அந்நூலைப் பெற்று வேறுபடி எழுதிக்கொண்டு நூலைத் திருப்பிக் கொடுத்துவிட்டார்.

### மாணவர்களை ஆராய்தல்

தம்பிரான் அவர்கள் பல நல்ல அறிஞர்களிடம் நூல்களைக் கற்றுச் சிறந்த புலமை நிறைந்தவராதலின், பிள்ளையவர்களுடைய மாணவர்களின் அறிவுத்திறனை ஆராய்ந்து பார்த்தார். நன்கு கற்பிக்கப்பட்டிருத்தலை உணர்ந்தார். பெரும்புலமை வாய்ந்த பிள்ளையவர்கள் திருவாவடுதுறை போன்ற பெரிய இடங்களில் இருந்து கல்வி கற்பிக்கத் தக்கவர் என்று உள்ளத்தில் முடிவு செய்துகொண்டார்.

### சுப்பிரமணிய தேசிகருக்குச் சொல்லுதல்

நாட்கள் சில சென்றன. தம்பிரான் கல்லிடைக்குறிச்சிக்குச் சென்றார். அப்பொழுது கல்லிடைக்குறிச்சியில் மேலகரம் சுப்பிரமணிய தேசிகர் என்பவர் இருந்தார். அவர் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சின்னப்பட்டமாக ஏற்படுத்தப் பெற்றவர். தாண்டவராயத் தம்பிரானிடம் பல நூல்களைப் படித்துணர்ந்தவர். அவர் தாண்டவராயத்

தம்பிரானைப் பார்த்து, "நீங்கள் சென்னையிலே இருந்து கொண்டிருக்கக்கூடாது. அவ்வாறிருப்பீர்களாயின் தங்களுடைய ஒப்புயர்வற்ற கல்வி நன்கு பயன்படமாட்டாது. நம்முடைய ஆதீனத்தில் இருந்துகொண்டு மாணவர்கட்குக் கல்வி பயிற்றவேண்டும். இதனை நான் முன்னரே முடிவு செய்து வைத்துக்கொண்டிருக்கிறேன்," என்று கூறினார்.

இதனைக் கேட்ட தம்பிரான், "அவ்வாறு சொல்வதற்கு என்னுடைய உடல்நிலை இடந்தரமாட்டாது. திரிசிரபுரத்திலே மீனாட்சிசுந்தரம் பிள்ளை என்னும் பெயருடைய பெரும்புலவர் ஒருவர் இருக்கிறார். அவர் இரண்டொரு முறை சென்னைக்கு வந்திருந்தார். அங்கு அவரோடு நெருங்கிப் பழகியிருக்கிறேன். இப்பொழுது திரிசிரபுரத்தில் தங்கியிருந்தபோதும் பார்த்தேன். இதற்குள்ளேயே பல நூல்களை இயற்றியிருக்கிறார். இவர் பாடிய அகிலாண்ட நாயகி பிள்ளைத்தமிழ் என்னும் அரிய நூலின் பாடல்கள் சிலவற்றைக் கேட்டுச் சென்னையிற் சிறந்த புலவர்களாக விளங்கும் பெரும்புலவர் சபாபதி முதலியார், மழவராயனேந்தல், மகாலிங்கையர் முதலியோர் பெருவியப்படைந்தார்கள். அத்தகைய அரிய புலவர் நம் ஆதீனப் புலவராக அமர்வாராயின் நம் ஆதீனத்தின் சிறப்பு எல்லாவிடங்களினும் பரவும். ஆகையால் இதனைச் செய்தல் இன்றியமையாததாகும்," என்று கூறினார். சுப்பிரமணிய தேசிகர், "அப்படியொருவர் இருப்பாராயின் கட்டாயம் ஆதீனப்புலவராக அமர்த்திவிடுவோம்," என்று கூறினார். தாண்டவராயத் தம்பிரான் அவ்விடமே சிலகாலந் தங்கியிருந்தார்.

**மகா வைத்திய நாதஐயர்மீது பாட்டு**

அங்குத் தாண்டவராயத்தம்பிரான் தங்கியிருந்தபோது தஞ்சை மாவட்டத்தில் இருந்துவந்த வைத்தியநாதையர்

என்னும் இசைப்புலவர் சிறப்பான இசையரங்கு நடத்தினார். அதனைக் கேட்டு மகிழ்ந்த தேசிகர் பல இசைப் புலவர்களுக்கு முன் "மகா" என்னும் சிறப்புப் பட்டத்தை வழங்கினார். அப்பொழுது இவர்,

"வையை வயித்திய நாத மறையவன் வாய்மலரும்
தூய்யசங் கீதச் சுவையமு தார்ந்திடில் துங்கவிண்ணோர்
பையர வார்த்துப் பருவரை நட்டுமுன் பாற்கடலைக்
கைகள் வருந்தக் கடையப் பெறாரென்பர் கற்றவரே."

"கற்றுத் திகழும் வயித்திய நாதக் கவின்மறையோன்
கொற்றத்தி னாற்களி கூர்ந்திசை பாடுமிக் கொள்கைதனை
முற்றத் துறந்த முனிவருங் கேட்க முயல்வரென்றால்
மற்றத் துறையினர்க் குண்டாகும் வேட்கைக்கு மட்டுளதே."

என்று இரண்டு பாடல்களைக் கூறினார். மற்றொருநாள் இசையரங்கு நிகழ்ந்தபோது,

"நிலைபெறுநல் இசைத்தமிழ்முந் நீர்கடக்கும்
பாரதியாய் நிலவும் வையைத்
தலைநகர்வாழ் மாவைத்ய நாதன்எனும்
பூசுரன்சங் கீதம் கேட்டுக்
கலைமகளும் வேதனையுற் றுடல்வெளுப்புண்
டன்னமிறங் காமல் கற்பான்
அலைகடல்சூழ் புவியிடத்தும் அம்பரத்தும்
பம்பரம்போல் அலைகின் றாளே."

என்று புகழ்ந்து பாடினார். திருநெல்வேலியில் வீரபத்திர பிள்ளை என்பவருடைய இல்லத்தில் இசையரங்கு நடந்தபோது,

"பொன்னாடும் புகழ்வையை மாவைத்ய
நாதன்எனும் பூசுரன் தன்
நன்னாவால் பாடும்இசை தனைக்கேட்டு
நாமகளும் நயந்து நாடி

இந்நாளில் இழந்திடுபூக் கன்றேயீர்ந்
தென்மானம் எனக்குத் தந்த
மன்னுவென் றருள்வீர பத்திரனை
வாழ்த்தியுளம் மகிழ்வுற் றூளே."

என்று பாடினர். இப்பாடல்களின் கற்பனை நயத்தைக் கேட்டு எல்லோரும் இவருடைய கல்விப் பெருமையை வியந்து கொண்டாடினர்கள்.

இறுதி

பெரும்புலமை வாய்ந்து விளங்கிய இவர் நன்னுள் ஒன்றிலே இறைவன் திருவடிநீழலை யடைந்தார். இவருடைய மறைவு இவரிடம் பல நூல்களைக் கற்றுணர்ந்த சுப்பிரமணிய தேசிகருக்கு மிகுந்த வருத்தத்தை அளித்தது. அவர் பலரிடமும் இவருடைய கல்வித் திறமை, நல்லியல்பு, தூய ஒழுக்கம் முதலிய அரிய பண்புகளைப் பாராட்டிக்கொண்டிருப்பது வழக்கம். ஒருநாள் தேசிகர் சிலரோடு உரையாடிக்கொண்டிருந்தார். அப்போது தாண்டவராயத் தம்பிரானுடைய குண நலன்களைப் பாராட்டிப் பேசிவிட்டு, "நாம் வழிபடுந் தெய்வம் நமக்கு முன் தோன்றி என்ன வேண்டுமென்று கேட்டால் தாண்டவராயத் தம்பிரான் அவர்களை ஒருமுறை பார்க்குமாறு செய்யவேண்டுமென்று கேட்போம்," என்று கூறினர். இவர் அவ்வச்சமயங்களில் தனிப்பாடல்கள் பலவற்றை இயற்றியதல்லாமல் நூல் யாதுஞ் செய்ததாகத் தெரியவில்லை.

---

## உசு. தேவராசபிள்ளை

### தோற்றம்

தேவராசபிள்ளை என்பவர் பெங்களூர் தண்டில் வாழ்ந் திருந்தார். தேவராசபிள்ளையின் தந்தையார் மொழி பெயர்ப்பாளர் அலுவலில் அமர்ந்து பெரும்பொருள் திரட்டிச் செல்வச் சிறப்புமிக்கவராக வாழ்ந்திருந்தார். ஆகவே தேவராசபிள்ளையும் சிறப்புடன் வாழ்ந்திருந்தார்.

### கல்வி

தேவராசபிள்ளைக்குச் செல்வச்சிறப்பு நன்கு அமைந் திருந்தபடியால் யாதொரு கவலையும் அற்றவராய்க் கல்வி கற்க விரும்பினர். அங்கிருந்த தமிழறிவாளர்களிடத்தில் தமிழ்நூல்களைப் பாடங்கேட்டுச் சிறிது தமிழ்ப்புலமை பெற்றார். மேலும் மிகுதியாக நூல்களைக் கற்கவேண்டும் என்னும் அவா அவருக்கு மிகுதியாக இருந்தது. பெரும் புலவர் மீனாட்சிசுந்தரம்பிள்ளையின் பெருமையைச் சிலரால் அவர் அறிந்தார். தக்கார் சிலரை மீனாட்சிசுந்தரம்பிள்ளை யவர்கள்பால் அனுப்பிப் பெங்களூருக்கு வந்து சிலகாலந் தங்கிப் பாடஞ்சொல்ல வேண்டுமென்று வேண்டச் செய்தார். தேவராச பிள்ளையின் வேண்டுகோளுக்கு மீனாட்சிசுந்தரம்பிள்ளை உடன்பட்டார். தம் மாணவர்க ளுடன் பெங்களூரை யடைந்து தேவராசபிள்ளையின் வீட்டில் தங்கினர். தேவராசபிள்ளைக்கு நன்னாள் ஒன்றில் இலக்கண இலக்கியங்களைப் போதிக்கத் தொடங்கினர். தேவராசபிள்ளை தாம் முன்பு படித்திருந்த நூல்களில் இருந்த ஐயங்களைக் கேட்டுத் தெளிந்ததுடன் திருவிளை யாடல் புராணம், திருத்தொண்டர் புராணம், நன்னூல், தண்டியலங்காரம் முதலிய நூல்களைப் பாடங் கேட்டுத் தெளிந்தார். செய்யுள் பாடுந் திறமும் நன்கு அமைந்தது.

"பூவின் கிழத்தி பொருந்தியிருக்குமிடத்தே நாவின் கிழத்தி நாடாள்" என்னும் உரை இவர்பால் பொய்யாயிற்று. மீனாட்சிசுந்தரம் பிள்ளைமீது,

"சிவபரஞ் சுடரின் இணையடி மலரைத்
திரிகர ணத்தினும் வழாது
பவமறத் தினமும் வழிபடு குணாளன்
பகர்திரி சிரபுரத் தலைவன்
சிவமுறு தென்சொல் ஐந்திலக் கணத்தில்
தெளிவுறச் சிறியனேற் கருளும்
நவமுறு புகழ்மீ னாட்சிசுந் தரவேள்
நாண்மலர் அடிமுடி புனைவாம்."

என்னும் செய்யுளையும் பாடிப் பரவினார்.

குசேலோபாக்கியானம்

மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் தேவராசபிள்ளைக்குப் பாடஞ் சொல்லும் நேரம்போக எஞ்சிய நேரங்களில் புராணங்கள் நூல்கள் முதலியவைகளை இயற்றுவதில் ஈடுபட்டிருந்தார். இதனைப் பார்த்த தேவராசபிள்ளை தாமும் நூல்கள் இயற்றவேண்டுமென்று விரும்பினார். தெலுங்கு மொழியில் வழங்கிவந்த குசேலோபாக்கியானத்தைத் தமிழில் மொழிபெயர்த்துப் பாடுவதென்று முடிவு செய்தார். முதலில் அந்தத் தெலுங்குக் குசேலோபாக்கியானத்தைத் தமிழில் உரைநடையாக எழுதி வைத்துக் கொண்டார். பிறகு செய்யுளாகப் பாடத் தொடங்கினார். பாடல்களைப் பிள்ளையவர்களிடம் காட்டித் திருத்திக் கொண்டார். ஒரு பாடலைச்செய்து முடிப்பதற்குள் பல தடவை அடித்துந் திருத்தியும் தாள்களைக் கிழித்தும் தேவராசபிள்ளை பலவாறு தடுமாறினார். இதனை யுணர்ந்த பிள்ளையவர்கள் எஞ்சிய பாகத்தைத் தாமே செய்து முடித்தார்.

சூதசங்கிதை

மேலும் பல இலக்கண இலக்கியங்களைப் பயின்றமையின் தேவராசபிள்ளைக்கு கல்வியறிவு மிகுதியாயிற்று. வேறொரு நூலைத் தாமேசெய்து முடிக்க வேண்டும் என்று எண்ணினார். சூத சங்கிதையைத் தமிழில் உரைநடையாக மொழிபெயர்த்து வைத்துக்கொண்டு செய்யுளாகப் பாடத் தொடங்கினார். இதனைப் பாடி முடிப்பதும் அவருக்குத் தொல்லையாகவே யிருந்தது. அடிக்கடி பாடல்களை இயற்றிக் கிழித்துக் கொண்டிருந்தார். செய்தியை உணர்ந்த பிள்ளையவர்கள் "இதனை என்னிடமே கொடுங்கள் நான் பாடி முடித்துவிடுகிறேன்" என்று கூறி வாங்கித் தாமே செய்து முடித்தார். இந்நூலும் இருவராலும் செய்யப் பெற்றுச் சிறப்பாக முடிவுபெற்றது.

"பல்லெலாம் தெரியக் காட்டிப் பருவரல் முகத்தில் கூட்டிச்
சொல்லெலாம் சொல்லி நாட்டித் துணைக்கரம் விரித்து நீட்டி
மல்லெலாம் அகல வோட்டி மானமென் பதனை வீட்டி
இல்லெலாம் இரத்தல் அந்தோ இழிவிழி வெந்த ஞான்றும்,"

என்பது குசேலோபாக்கியானம்.

"ஒற்றைமாங் கனிமெய் அடியவர்க் குதவி
உம்பர்க்கும் அரியநன் கதியை,
உற்றசீ ரம்மை யார்தொழில் நன்றென்
றுவந்தெனப் பன்முசுக் கலைகள்,
சொற்றவவ் வனத்தில் சொற்றதே மாவில்
தூங்கிய தேங்கனி பலவும்,
நற்றவச் சைவர் பெரியவர் கொள்ள
நாள்தொறும் நாள்தொறும் உதிர்க்கும்."

என்பது சூதசங்கிதை.

கைம்மாறு

பிள்ளையவர்கள் திரிசிரபுரத்திற்கு மீள எண்ணினார். தமது நோக்கத்தைத் தேவராச பிள்ளைக்குத் தெரியப்

படுத்தினர். பிள்ளையவர்களைப் பிரியத் தேவராசபிள்ளை உள்ளம் வருந்தினர். பிறகு ஒருவாறு தெளிந்தார். வெண் பொற்காசுகள் (ரூபாய்) ஐயாயிரமும் பொன்னுடை முதலி யவைகளையும் பிள்ளையவர்கட்கு முன்வைத்துக் கீழே விழுந்து வணங்கினர். தேவராசபிள்ளையின் நன்கொடை பிள்ளையவர்கட்கு மிகுந்த மகிழ்ச்சியை உண்டாக்கியது. "நான் கைம்மாறு கருதாமலேதான் எல்லோருக்கும் கலை யறத்தைச் செய்கிறேன். தாங்கள் வழங்கும் இப்பொருளை அன்புக் காணிக்கையாகவே பெற்றுக் கொள்ளுகிறேன். குசேலோபாக்கியானத்தின் பெரும் பகுதியையும், சூத சங்கிதையின் பெரும் பகுதியையும் நான் செய்திருந்தா லும் இவைகளில் என்னுடைய பெயரையுஞ் சேர்த்தல் வேண்டாம். இந்நூல்கட்கு மூலகாரணந் தாங்களே யாகையாலும் தாங்களே தொடங்கிப் பாடி யிருத்தலாலும் இவைகளைத் தங்கள் பெயராலேயே வெளியிட்டுக்கொள் ளுங்கள்,'' என்று கூறி அவரிடம் அளித்துவிட்டுப் புறப் பட்டார். பிறகு இந்நூல்கள் தேவராசபிள்ளை பெயரால் அவர் இயற்றியதாகவே வெளியாயின.

வேறு நூல்கள்

பிள்ளையவர்கள் திரிசிரபுரத்திற்கு மீண்டபிறகு மேலும் தேவராசபிள்ளை நூலாராய்ச்சியில் ஈடுபட்டுத் தமது அறிவைப் பெருக்கிக்கொண்டார். செய்யுள் பாடுந் திறம் நாளடைவில் வளர்ச்சியடைந்தது. வேறு பல நூல்களைத் தாமே முழுதும் செய்து பிள்ளையவர்கட்கு அனுப்பினர். பிள்ளையவர்கள் அந்நூலைத் திருத்திச் சிறப்புப்பாயிரமும் பாடியனுப்பினர். அடிக்கடி பிள்ளை யவர்கட்குக் கடிதமும் எழுதிக்கொண்டிருந்தார். மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கட்கு இவ்வாறு பெரும் பொருளுதவி

யைப் பாடங் கேட்டதன் பொருட்டுச் செய்தவர்கள் வேறு எவரும் இலர். பிள்ளையவர்கள் பெங்களூருக்குச் சென்றிருந்தபோது தம்முடைய மாணவர் குழாத்துடனும் குடும்பத்துடனும் சென்றிருந்தார். எல்லோருக்கும் உண்டி உறையுள் முதலிய எல்ல வசதிகளையுஞ் செய்தமைத்து நன்கு போற்றினர். பிள்ளையவர்கள் தேவராசபிள்ளையின் குணநலம், அடக்க ஒடுக்கம் முதலிய பெருங்குணங்களைப் பாராட்டியதுடன், "எல்லார்க்கும் நன்றும் பணிதல் அவருள்ளும், செல்வர்க்கே செல்வந் தகைத்து" என்னும் குறளைச் சுட்டிப் பணிவுடைமை தேவராசபிள்ளைக்குப் பிறிதொரு செல்வமாக விளங்கியதெனப் பாராட்டிப் புகழ்ந்தனர்.

---

## ௩௦. மு. இராமசாமிக் கவிராயர்

**தோற்றம்**

பாண்டி வளநாட்டிலே திருநெல்வேலி மாவட்டத்திலே சீவில்லிபுத்தூர்ப் பிரிவிலே சேற்றூருக்கு அண்மையில் உள்ள முகவூரிலே இராமசாமிக் கவிராயர் கொல்லமாண்டு ௲௦௦ஈ-ல் பிறந்தார். இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுச் சிறந்த புலவரானர். முகவூர் கந்தசாமிக் கவிராயர் இவருடைய தமையனாராவார். மு. ரா. அருணசலக் கவிராயர், சேரா. சுப்பிரமணியக் கவிராயர், மு. ரா. கந்தசாமிக் கவிராயர் ஆகிய முப்பெரும் புலவர்களும் இவருடைய அருமைக் கான்முளைகளாவர்.

**வாழ்க்கை**

இராமசாமிக் கவிராயர் சேற்றூர்ப் பெருநிலக்கிழார் சுந்தரதாசத் தேவர் அவர்களுக்கு ஆசிரியராக அமர்ந்து

சேற்றூர்ப் புலவராகத் திகழ்ந்தார். கற்பனை மிகுந்த செய்யுட்களை மிகவிரைவாகப் பாடுவதில் இவர் ஆற்றல் மிக்கவர்.

பெருநிலக்கிழார் வருகை

அந்நாளில் கொண்டபொம்மு நாயக்கர் என்பவர் தேவாரம் பெருநிலக்கிழாராக இருந்தார். அவர் ஒருநாள் இராமசாமிக் கவிராயர் வீட்டிற்கு வந்தார். அவருடைய வருகை கவிராயருக்கு மிகுந்த மகிழ்ச்சியை யளித்தது.

"நவநிதியங் கடலமுத நாவலர்தந்
திடுசெல்வ நான்முன் செய்த
தவபலந்தென் றுறைசைகுரு சாமியரு
ளால்வந்த தகைமை போலச்
சிவசமய பரிபாலன் தேவாரங்
கொண்டபொம்மு தீரன் இந்தப்
புவனமெலாம் புகழவென்றன் புன்குடில்நன்
குடிலாகப் போந்த தாமே."

என்னுஞ்செய்யுளைப் பாடினார்.

அறச்சாலை மடையன் சூழ்ச்சி

சேற்றூரிலே அறச்சாலையில் சமையலாளாக இருந்த வேங்கடாசலம் என்பான் ஒருவன் இராமசாமிக் கவிராயர் வாக்கால் பாடல் ஒன்றுபெற விரும்பினான். பொருளைக் கொடுத்தாலும் கவிராயர் பாடமாட்டார். அவர் பொருளுக்கு அடிமை அல்லர். அன்புக்குத்தான் அடிமை. சமையல்காரன் இதனை நன்கு உணர்ந்தான். ஒருநாள் அறுவகைச் சுவையும் நன்கு அமையுமாறு கவிராயருக்காகத் தனிவிருந்து ஒன்றுசெய்தான். கவிராயரைக்கண்டு, "பெரியீர் தாங்கள் அடியேன் விருந்தை உண்ணவருதல் வேண்டுமென்று விரும்பியழைத்தான். வேங்கடாசலத்

தின் வேண்டுகோளை யேற்றுக்கொண்டு அறச்சாலைக்குச் சாப்பிடச்சென்றார். சாப்பாடு மிக அருமையாக இருந்தது. கவிராயர் வாக்கில் இருந்து அரிய செய்யுள் ஒன்று,

"செய்மணக்கும் வளச்சேறைச் சுந்தரதா
சேந்திரன்சத் திரத்தில் உள்ளன்
பைமணக்கச் செய்வேங்க டாசலமான்
நமக்களித்த பாய சத்தின்
நெய்மணக்கும் ஒருகாதம் பான்மணக்கும்
முக்காதம் நேசித் துண்ட
கைமணக்கும் அறுகாதம் வாய்மணக்கும்
பன்னிரண்டு காதந் தானே."

என்று புறப்பட்டது. சமையலாளினுடைய எண்ணம் இனிது நிறைவேறியது.

தானுபதிக் கரையாளன்

ஒருநாள் சேற்றூர்ப் பெரிய கோவிலுக்குக் கவிராயர் சென்றிருந்தார். மரம் வெட்டி விற்கும் தாசரிராசா என்பவனும் கோயிலுக்குச் சென்றிருந்தான். தானுபதிக் கரையாளன் என்பவன் அங்குக் கோயில் அலுவல்களை யெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் கவிராயர் வாக்கால் பாடல்கேட்க விரும்பினான். தாசரிராசாவுக்கு அறுவகைச் சுவையுடன் தட்டில் அமுது கொண்டுவருமாறு கவிராயருக்கு முன்னாலேயே பணியாள் ஒருவனை அனுப்பிவிட்டுக், கவிராயரை மடைப்பள்ளி உணவு கொள்ளுமாறு சீட்டுக்கொடுத்தான். இதனைப்பார்த்த கவிராயர்,

தாசரிக்குத் தட்டமுதும் சட்சாதி யோடாளும்
தேசமெய்க்கத் தந்தெனக்குச் சீட்டமுது—நேசமின்றித்
தந்தாய் வயதுகல்வி சாதியொழுக் கம்பழமை
இந்தவைந்தில் யாதைநினைந் தே

என்று பாடினார். தாணுபதிக் கரையாளன் மறந்து சொல்லி விட்டேன் என்று ஒப்புரை உரைத்து விட்டுக் கவிராயருக்குச் சிறப்பாகச் சாப்பாடு கொண்டுவரச் செய்தான்.

ஆதீனத்தில்

குருபூசை விழாவை முன்னிட்டுக் கவிராயர் திருவாவடுதுறை ஆதீனத்துக்குச் சென்றார். அப்பொழுது சுப்பிரமணிய தேசிகர் என்பவர் பதினாறுவது பட்டத்தில் எழுந்தருளி யிருந்தார். அவர் திருமுன் இசைக்கச்சேரி நடைபெற்றது. திருவையாற்றுப் பாடகர்கள் இருவர் நீண்டநேரம் வீணை வாசித்தார்கள். அவர்களுடைய இசைக்கச்சேரி மிக இனிமையாக இருந்தது. தேசிகர் அந்தப் பாடகர்களைப்பார்த்து, "உங்களுடைய பாட்டைக் கேட்பதற்கு எட்டு ஆண்டுகள் ஆனாலும் எனக்கு விருப்பந்தான்," என்று கூறினார். இதனைக்கேட்டுக் கொண்டிருந்த கவிராயர்,

"மட்டுவரு டம்பொழிகா வுயர்துறைசைச்
சுப்ரமண்ய வள்ள லாரி
தட்டுவரு டன்பகைக்குந் திருவாயால்
உமதிடஞ்சங் கீதங் கேட்க
எட்டுவரு டம்பிரியம் எனச்சொலையாற்
றப்புலவீர் இனிமேல் உம்முன்
மெட்டுவரு டவுந்தெரியா திருப்பர்சங்
கீதங்களின் மிகவல் லோரே."

என்னுஞ் செய்யுளைப்பாடினார்.

கடையரிசி

கவிராயர் எட்டையபுரத்திற்குச் சென்றார். அங்கு மேலாளராக இருந்த இராமசாமிப் பாண்டியனுங் கவிராயரும் யானைக்கொட்டாரம் பார்க்கச் சென்றனர். அப்பொழுது யானைப்பாகன் யானைக்கு அரிசிக் கவளங்

கொடுத்துக் கொண்டிருந்தான். மேலாளர் யானைப்பாகனைப் பார்த்து, "இந்த அரிசி எந்த அரிசி?" என்று கேட்டார். பாகன், 'கடையரிசி' என்று மறுமொழி பகர்ந்தான். அரிசி நல்லதாக இருப்பதைப் பார்த்த மேலாளர், கடையில் வாங்கப்பட்டதாயினும் முதன்மையான அரிசி என்னுங் கருத்தை வைத்துக் கொண்டு "இது கடையரிசியல்ல" என்று கூறினார். பாகன், "கடையரிசிதான்" என்று மேலுமேலுங் கூறினான். இருவர் கருத்தையும் உணர்ந்த கவிராயர்,

"விடையரிசி வசம்புவையே பணிராம
சாமிமன்ன வியந்து நீசொல்
கடையரிசி அல்லவெனும் கருத்ததனைத்
தென்றல்வந்து கமழுந் தென்வெற்
புடையவனும் யானுமலைத் தவனென்றால்
எவரறிந் துரைப்பார் சொல்வாய்
நடையரிகள் உலவுமலர்ப் பொழில்சூழுந்
தென்னிளசை ராசரேறே."

என்னுஞ் செய்யுளைக் கூறினார்.

ஈற்றடியைப் பாடியது

இராமநாதபுரத்தில் நவராத்திரி விழா எப்பொழுதுஞ் சிறப்பாக நடைபெறுவது வழக்கம். ஓராண்டில் விழா நடைபெற்றது. பாற்கர சேதுபதிமன்னர், பாண்டித்துரைத் தேவர், இராமசாமிக் கவிராயர் முதலானவர்களைத் தேர்வாளர்களாக ஏற்படுத்தி விழாவுக்கு வந்த புலவர்களின் அறிவுத்திறனை ஆராயச் செய்தார். அரசரே, "கடைக் கிணையோ மற்றையர்தங் கால்" என்று ஈற்றடிகொடுத்து ஏனைய அடிகளை நிறைத்துப் பாடுமாறு கூறினார். ஒருவராலும் முடியவில்லை. எல்லோரும் பேசாமல் இருந்தார்கள். இராமசாமிக் கவிராயர் பாற்கரசேதுபதியைப்

பார்த்து, "இனி, தேர்வாளர்களாக இருக்கும் நாங்கள் யாராவது இப் பாட்டை முடிக்கலாமா?" என்று கேட்டார். முடிக்கலாமென்று அரசர் மறுமொழி கூறினர். உடனே கவிராயர்,

"வெற்றிவேலைக் கையிலேந்தியுள்ளவனும் திருச்செந் தூரில் எழுந்தருளி யுள்ளவனும் விமலனும் ஆகிய முருகப் பெருமானை அன்போடு வழிபடுகின்ற பாற்கர சேதுபதி மன்னனே! இடபக்கொடியைத் தாங்கியுள்ள சிவபெருமா னுடைய அன்பனாகிய மிருகண்டு முனிவருடைய பிள் ளைக்கு மற்றவர்களுடைய பிள்ளைகள் ஒப்பாவார்களோ" என்னும் பொருளை அமைத்து,

"வேற்கரனைச் செந்தூர் விமலனை அன் பாற்பரவும்
பாற்கர சேதுபதி வேந்தே—மேற்கொள்
விடைக்கொடியோற் கன்பன் மிருகண் டுபிறங்
கடைக்கிணையோ மற்றவர்தங் கால்."

என்று பாடினர். உடனே அரசர் மிகுந்த வியப்படைந் தார். எழுந்து வந்து மிகுந்த விலையுள்ள பெரிய பொன் னாடையை எடுத்துக் கவிராயருடைய தோளிலே சாத்தி மிகவும் புகழ்ந்து கொண்டாடினர்.

**சுந்தர விலாசம்**

கவிராயர் ஊற்றுமலைக்குச் சென்றார். ஊற்றுமலைப் பெருநிலக்கிழார் தாம் புதிதாகக் கட்டிய சுந்தரவிலாசம் என்னும் மாளிகையைக் கவிராயருக்குக் காட்டினர். அம் மாளிகையைப் பார்த்த கவிராயர்,

"முந்தரவி லாசகல கடித்தவுயர்
திருமாலை முப்பு ரந்துன்
பந்தரவி லாசமதால் வென்றவனைப்
பணியிதயா லயபண் பாகின்

சுந்தரவி லாசநிறை சுந்தரத்தைப்
பார்த்திடிலத் துறக்க வாழ்வு
மந்தரவி லாசபலே யாவெனச் சொல்
வார்க்கும்விருப் பாகுந் தானே."

என்னுஞ் செய்யுளேப் பாடினர்.

திருமணத்திற்கு வராத காரணம்

ஊர்க்காட்டுப் பெருநிலக் கிழாருக்குத் திருமணம் நடைபெற்றது. அத் திருமணத்திற்கு வரவேண்டு மென்று கவிராயருக்கும் அழைப்பு வந்தது. எக்காரணத்தாலோ கவிராயர் திருமணத்திற்குச் செல்லவில்லே. சிலநாட்கள் கழித்துச் சென்ருர். "திருமணநாளன்று ஏன் வரவில்லே?" யென்று பெருநிலக்கிழார் உசாவினர். அதற்குக் கவிராயர், "தங்கள் திருமண வரையின் சிறப்பைப் பார்ப்பதற்காகத் தேவேந்திரன் ஆயிரங்கண்களே அடைந்தான். நான்முகன் எட்டுக்கண்களேப் பெற்ருன். அறுமுகக் கடவுள் பன்னிரண்டு கண்களே அடைந்தார். எனக்கோ இரண்டு கண்களுக்குமேல் இல்லே. அதனல், என்னுடைய இரண்டு கண்களேக் கொண்டு தங்கள் திருமணச் சிறப்பைப்பார்ப்பதற்கு முடியாது என்று வராமல் இருந்துவிட்டேன்," என்னுங் கருத்தை அமைத்து,

"துணேயெனச்சொல் வோர்க்கருளும் சிவன்சேது
ராயசெய துரைகல் யாண
மணவரையின் சிறப்பதனேப் பார்ப்பதனுக்
காயிரங்கண் வான்கோன் உற்ருன்
குணமுடைய பிரமனுமே எண்கணுற்ருன்
பன்னிருகண் குமரன் உற்ருன்
இணேவிழியாற் பார்ப்பதனுக் கடங்காதென்
றன்றுவரா திருந்தேன் யானே."

என்னும் பாடலால் மறுமொழி கூறினர்.

பாரதச் சொற்பொழிவைப் பாராட்டல்

கவிராயரின் மாணவரும் சேற்றூர்ப் பெருநிலக்கிழாரும் ஆகிய சுந்தரதாசுத்துரை திருக்குற்றாலத்திற்குச் சென்றார். அங்குச் சிலருடைய விருப்பப்படி பாரதச் சொற்பொழிவு செய்தார். அச் சொற்பொழிவு மிக அருமையாக இருந்தது. அச்சொற்பொழிவைப் பாராட்டிக் கவிராயர்,

"திடபுருட சிங்கம்எங்கள் சுந்தரதா
சேந்திரன்தான் செயும்பிர சங்கம்
வடவருவி என்பரது மேற்போமா
செவிக்கினிக்கு மாமுந் நீர்சூழ்
புடவியெங்குந் தொனித்திடுமா பன்னூலை
யாராய்ந்த புலவீ ரென்றும்
உடலழுக்கை ஒழிப்பதன்றி அகத்தழுக்கை
ஒழித்திடுமா உரைசெய் வீரே."

என்று பாராட்டிப் பாட்டொன்று பாடினார். கவிராயர் இப் பாட்டின் நான்காவது அடியில் 'உடலழுக்கை' என்று உரைத்த அளவிலேயே மேற்கொண்டு கவிராயர் இந்த வகையாகத்தான் சொல்லப் போகிறார் என்பதை உணர்ந்து கொண்ட பெருநிலக் கிழார் 'சபாசு' என்று கூறி பாராட்டினார். பெருநிலக்கிழாரின் நுண்ணறிவு கவிராயருக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. கவிராயர் மீண்டும்,

"முன்னமுப ரங்கமன்னன் கவிகேட்டுச்
சிரமசைப்பு மொழியும் லக்கம்
பொன்னெனச்சொல் லும்புலவீர் சுந்தரதா
சேந்திரனைப் போலப் பாவின்
பின்வருங்கற் பனையிஃதென் றறிந்துசபா
சென்பதுண்டோ பேசுங் கால்இம்
மன்னரிரு வரிலெவரே தமிழ்த்திறமுற்
றுந்தெரிந்தோர் வழுத்து வீரே."

[உபரங்க மன்னன்-உடையார்பாளையம் பெருநிலக்கிழார்.]

என்று பாடினார்.

குதிரை நன்கொடை பெறுதல்

பெரியகுளந் தாலுகா இரசக்க நாயக்கனூரைச் சேர்ந்த இராயப்பன்பட்டியில் இராயப்ப உடையார் என்னுஞ் செல்வர் ஒருவர் கவிராயர் காலத்தில் இருந்தார். அவர் அறிஞர்கட்குப் பரி பரிசில் வழங்கும் இயல்பினர். அவருடைய நல்லியல்பை அறிந்த கவிராயர் அவரைப் பார்க்கச் சென்று,

"அநந்தபத்ம நாபன்மன் றுளாடிமுதல்
செல்வரெலாம் அகத்து மெச்சக்
கனந்திகழக் கொடுத்தவரென் றுரைசெய்வார்
அவர்தம்மைக் காணுங் காலத்
தினங்கவிசொல் வோர்க்குமிகு வாசிகொடுப்
பாயுனைப்போல்செய் தாரா ரோவிற்
பனம்பொருந்து ராயப்பேந் திரவுடையாய்
உனையவர்போற் பகரொ ணாதே."

என்னுஞ் செய்யுளைப்பாடினர். உடையார் கவிராயருக்கு ஒரு குதிரை கொடுத்தார். கவிராயருடன் அவருடைய மகனாகிய சுப்பிரமணியக் கவிராயருஞ் சென்றிருந்தார். அப்பொழுது அவர் சிறுவராக நிகண்டு முதலிய நூல்களைக் கற்றுக் கொண்டிருந்தார். உடையார் சுப்பிரமணியக் கவிராயருடைய அறிவுத்திறனையும் ஆராய்ந்து பார்த்துக் "குட்டிக் கவிராயர் குட்டிக்குதிரை கொள்க," என்று கூறிக் குதிரைக் குட்டி ஒன்றை வழங்கினார்.

நீதித்தலைவரிடம் வழக்கு

கந்தசாமிக் கவிராயர் இராமசாமிக் கவிராயருடைய தமையனார். இவர் தம்முடைய பொருள்களைக்கொண்டு முகவூரிலே நாயக்கர்மார் தெருவின் மேற்புறமந்தையில் ஒரு பிள்ளையார்கோயில் கட்டத்தொடங்கினார். கோயில் கட்டுவதை நாயக்கர்மாரிற் சிலர் தடுத்தனர். உடனே

கவிராயர் தடுத்தவர்கள்மீது வழக்குத் தொடுக்க எண்ணி ஞர். அப்பொழுது சீவில்லிபுத்தூரிலே சர்வண முத்துப் பிள்ளை என்பவர் தாசில் அதிகாரமும், நீதித்தலைவர் அதிகார மும் பெற்றிருந்தார். கவிராயர் சரவணமுத்துப் பிள்ளை யிடஞ் சென்று,

"மன்னவநின் திருமுகத்தைக் கண்டமட
வார்கரத்து வளைபோ காமல்
முன்னமொரு தடையிடுவ தியற்கையன்றி
ஒருதருமம் முடிக்கும் போது
பின்னமுறத் தடையிடுதல் நின்னதிகா
ரத்துமுண்டேல் பிறர்யார் காப்பார்
பன்னுதமிழ் அருமையறி சரவணமுத்
தேந்திரசம் பனபூ மானே."

"அரக்கரைவென் றவனெனச்சொல் சரவணமுத்
தேந்திரநின் னதிகா ரத்தில்
இரக்கமில்லா தவர்களுக்குஞ் செல்வருக்குங்
கலகமுண்டாம் இதுவல் லாலோர்
வருக்கொருவர் கலகமியற் றுதபடி
ஒடுக்கியதை மறந்து செய்யும்
குரக்குமனத் தரையொடுக்க உத்தரவு
கொடுத்துச்சீர் கொள்ளு வாயே."

என்று இரண்டு செய்யுட்கள் மூலம் தெரியப்படுத்திக் கொண்டார். இதனைக் கேட்ட சரவணமுத்துப்பிள்ளை, "எதற்காகத் தடுக்கிறார்கள் ? தடுக்கவேண்டிய காரணம் என்ன" வென்று உசாவினர். அதற்கு மறுமொழியாக,

"இக்கடவுள் முகந்தூங்கல் அடிக்கடிநாம்
பார்ப்பதனுக் கெட்டா தென்றோ
தக்கநற்சிற் றுண்டிபெரு வயிறுநிரம்
பாதென்றோ சந்தி யெல்லாம்

மிக்கவுந்தம் வாகனத்தால் நமதகத்தைத்
துளைப்பரென்றோ விலக்கு தற்கே
அக்கரையுற் றனர்தவஞ்சேர் சரவணமுத்
தேந்த்ரமன்ன அறைகு வாயே."

என்னுஞ் செய்யுளைக் கூறினர். இதனைக் கேட்ட சரவண முத்துப்பிள்ளை நகைத்துக் கோயில்கட்டுவதைத் தடுத்தவர்களை யழைத்துக் கண்டித்தார். அதன் பிறகு கோயில் திருப்பணி இனிது நிறைவேறியது.

குறவஞ்சி

இவரும் இவருடைய தமையனாராகிய கந்தசாமிக் கவிராயரும் சேற்றூர்ப் பெருநிலக்கிழார் முத்துச்சாமித் துரையின்மீது குறவஞ்சி என்னும் நூல் ஒன்றுபாடி அரங்கேற்றஞ் செய்தனர். துரை இருவருக்கும் நன்கொடைகள் வழங்கிச் சிறப்புச் செய்ததோடு இருவரையும் சிவிகையில் வைத்து நகர்வலமுஞ் செய்வித்தார். அப்பொழுது அங்குத் தானுதிபதியாக இருந்த சுந்தர மகாலிங்கம் பிள்ளை என்பவர் சிறிது தொலை சிவிகையைச் சுமந்தார். அப்பொழுது இராமசாமிக் கவிராயர்,

"செய்தாங்குஞ் சேறைத் துரைமுத்துச் சாமிசிங் கேறமைச்சன்
மெய்தாங்கு சொற்சுந் தரமகா லிங்க விவேகனென்று
மைதாங் குலகில் பெருங்கீர்த்தி தாங்கிட வாணர்சிவி
கைதாங்கி மிக்க கனந்தாங்கி னனெந்தக் காலத்துமே."

என்று பாடினர்.

இறுதிக்காலத்தினும் பாவியற்றும் வன்மை

இராமசாமிக் கவிராயர் அகவைமுதிர்ந்து இறுதிக் காலத்தை நெருங்கியவராய் இருந்தார். இதனையுணர்ந்த பாண்டித்துரைத் தேவர் இராமசாமிக் கவிராயரைப் பார்ப்பதற்காகக் கவிராயருடைய இல்லத்திற்குச் சென்றார். கவி

ராயரின் நிலையைக் கண்டு உள்ளம் வருந்தினர். அப்பொழுது கவிராயர்,

“முன்பாண்டிப் புரவலனும் சங்கம்வைத்தோர்
சாமமதின் முடுக்கிவிட்டான்
இன்பாண்டித் துரையோசங் கப்புலவர்
தனிகரென இருத்தற் கெண்ணித்
தன்பாண்டில் தனைநடத்திப் பொருள்தேடிக்
கொண்டுவந்து தந்து காத்தே
என்பாண்டி எனுங்கடவுள், திருவருட்செல்
வமும்எய்தி இருக்கின் றனே.”

என்னுஞ் செய்யுளைப் பாடினர். இதனைக்கேட்ட பாண்டித் துரைத்தேவர் மகிழ்ச்சியடைந்தார். “நான் சொல்லுகிற சொல்லைக் கருதாது கருத்தை மட்டும் நோக்க வேண்டும். ‘மழைக்கா லிருட்டானாலும் மந்தி கொம்பிழக்கப் பாயாது’ என்னும் பழமொழி தங்களிடத்தில் நன்கு பொருந்தியிருக்கின்றது” என்றார்.

---

## ௩௩. வீர. லெ. சின்னையச் செட்டியார்

தோற்றம்

செட்டிமார் நாட்டிலே தேவகோட்டையிலே சின்னையச் செட்டியார் பிறந்தார். இவர் இளைஞராயிருக்கும் போதே, வன்தொண்டர் என்னும் நாராயணச் செட்டியார் பெரும் புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை முதலிய பலரிடங் கல்வி கற்றுச் சிறந்த புலவராக விளங்கியிருந்தார். காரைக்குடி சொக்கலிங்கையா, வேம்பத்தூர்ப் பிச்சுவையர் போன்ற பலர் வன்றொண்டரிடம் தமிழ் நூல்களைப் பாடங்கேட்டுக் கொண்டிருந்தனர். சின்னையச் செட்டியாரும் வன்தொண்டரிடத்தில் கல்வி கற்கத் தொடங்கிப் பல ஆண்டுகள் இலக்கண இலக்கியங்களையும் புராணங்களையும் ஐயந்திரி

பறக் கற்றுணர்ந்தார். சின்னையச் செட்டியாருடைய புகழ் ஆசிரியராகிய வன்தொண்டருடைய புகழைப்போல் எங்கும் பரவியது. மதுரையில் தமிழ்ச் சங்கத்தை அமைத்த பாண்டித்துரைத் தேவரும் சின்னையச் செட்டியாருக்கு நண்பராஞர்.

ஐயங்காருக்கு நற்சான்று

செட்டியார் நல்ல புலவராகப் புகழுடன் விளங்கி யிருந்த காலத்தில் ரா. இராகவ ஐங்கார் இவரிடம் தமது புலமையைக் காட்டி நற்சான்று பெற்றிருந்தார் என்பது, "சேது சம்ஸ்தான மகாவித்துவான். ரா. இராகவ ஐயங்கார் அவர்கள் 1906 முதல் 1911 வரை தேவகோட்டையில் பெரிய மைனர் அருணசலம் செட்டியாருக்குத் தேவாரம், திருவாசகம் முதலியன சொல்லிக் கொடுத்துக்கொண் டிந்தார்கள். அக்காலத்திலேயே பெரும்புகழ் பெற்றிருந்த சின்னையச் செட்டியார் அவர்கள் கொடுத்திருந்த சான்றி தழ் ஒன்றினலேயே இராகவ ஐயங்கார் அவர்கள் தேவ கோட்டையில் பணியாற்றும் வாய்ப்பு ஏற்பட்டது. இராகவ ஐயங்கார் அவர்கள், சின்னையச் செட்டியார் அவர்கள் சான்றிதழையும், பூண்டி அரங்கநாத முதலியார் அவர் களுடைய நற்சான்றிதழையுந்தான் பெரிதும் மதித்துத் தம் இறுதிக் காலம் வரை பேணி வைத்திருந்தார்கள் என்பது இங்கே குறிப்பிடத் தகுந்தது," என்று செட்டி நாடுந் தமிழும் என்னும் நூலில் அதன் ஆசிரியர் எழுதி யிருப்பதனுற் பெறப்படுகிறது.

மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்களைக் காண்டல்

சின்னையச் செட்டியார் தம் ஆசிரியரின் ஆசிரியரான மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்களைத் தம் ஆசிரியரோடு திருவாவடுதுறைக்குச் சென்று பார்த்தார். சின்னையச்

செட்டியாரின் பண்புகள் பிள்ளையவர்களின் உள்ளத்தைக் கவர்ந்தன. இவரைப்பார்த்ததனால் பிள்ளையவர்கட்கு மகிழ்ச்சியும் உண்டாகியது. உடனே பிள்ளையவர்கள்,

"வன்தொண்டன் வார்த்தை மரீஇயென் செவிவழிபுக்
கின்றுண்ட நீயமர்ந்தாய் என்னிதயத்—தின்றுண்டன்
அல்லனென வோவெளிவந் தாய்சிந் கயவேளே
செல்லவிடு வேன்சொல்புறத் தே."

என்று இனிய வெண்பா ஒன்றைப் பாடினர்.

இவர் இயற்றிய நூல்கள்

திருவொற்றியூர்ப் புராணம், குன்றக்குடிப் பிள்ளைத் தமிழ், நகரத்தார் வரலாறு, பிரபஞ்சபந்தகம், தேவைத் திரிபந்தாதி முதலியன இவரால் இயற்றப்பெற்ற நூல்கள். இவருடைய நூல்கள் சொன்னயம் பொருணயம் அமைந்து சங்ககால நூல்களைப்போல் சிறந்து விளங்குகின்றன. இவருடைய தேவைத் திரிபந்தாதியை ரா. இராகவ ஐயங்கார் இவரிடம் பாடங்கேட்டுத் தெளிந்ததுடன் அந்நூன யத்தை மு. இராகவ ஐயங்காரிடமும் பாராட்டிப் பேசினர். அந்நூலைத் தாமும் பாடங்கேட்க விரும்புவதாகச் சொல்லவே மு. இராகவ ஐயங்காருக்கு, ரா. இராகவ ஐயங்கார் பாடமுஞ் சொன்னர்.

இறுதி

இவ்வாறு சிறந்த நூலாசிரியராகவும் அறிஞராகவும் விளங்கியிருந்த இவர் காலமான ஆண்டு முதலியன விளக்கமாகவில்லை.

---

## ௩௨. இராமசாமி ஐயர்

### தோற்றம்

இசைப் புலமையில் இசைமிகப் பெற்று இலங்கிய மகா வைத்தியநாத ஐயருக்கு முன் பிறந்தவராகிய இவர் தம் உடன் பிறந்தாராகிய வைத்தியநாத ஐயரோடு கல்வியைப் பயிலத் தொடங்கினர். இசைப் பயிற்சி, தமிழ் நூற் பயிற்சி, வடநூற் பயிற்சி ஆகியவைகளை இருவரும் பெற்றனர். இவர் தம்முடைய உடன் பிறந்தவராகிய வைத்தியநாதையரை எப்பொழுதும் விட்டுப் பிரியாமல் அவரை உடன் வைத்துக்கொண்டே இருந்தனர். இவருடைய இசைப் பெருமையைப் பார்க்கினும் இவருடைய இளவலாகிய வைத்தியநாதையருடைய இசைப் பெருமைதான் மிகவுஞ் சிறந்தோங்கியது. ஆயினும் வைத்தியநாதையர் தம் தமையனரிடம் பணிவாகவே நடந்துகொண்டார்.

### செய்யுள் இயற்றுதல்

தமிழ்ப் பயிற்சியை மிகுதியாகப் பெருக்கிக் கொண்ட இவர் செய்யுள் இசைப்பாட்டு முதலியவைகளை இயற்றத் தொடங்கினர். நினைத்த பொருளை அமைத்து விரைவாகப் பாடலை இயற்றலானர். இவர் தம்முடைய தம்பி வைத்தியநாதையரோடு புதுக்கோட்டைக்குச் சென்று அங்குத் தங்கியிருந்தார். அப்பொழுது மழவராயனேந்தலில் இருந்து வந்த தமிழறிஞர் ஒருவர் புதுவை யரசர் முன்னிலையில் அவதானஞ் செய்தார். அதனைப் பார்த்து மகிழ்ந்த இவர் இசைப்பாட்டு ஒன்றை இயற்றி அவைக்களத்தில் பாடினர். அவையோர் இவருடைய செய்யுளாற்றலையும் இசையாற்றலையும் பாராட்டிப் போற்றினர்கள்.

### பெரியபுராண இசைப்பாட்டு

இவர் நன்றாகச் செய்யுள் இயற்றும் ஆற்றலும் இசையிலக்கணத் தேர்ச்சியும் உடையவராக இருந்தபடியால் பல

அன்பர்கள் பெரியபுராணத் தொண்டர்கள் வரலாற்றை இசைப்பாட்டாக இயற்றினால் திருத்தொண்டர்கள் வரலாறு உலகத்திலே நன்றாகப் பரவும் என்று தங்கள் நோக்கத்தைத் தெரியப்படுத்தினார்கள். சிவகதை செய்வதற்கு இத்தகைய இசை நூல்கள் மிக உதவியாக இருக்குமென்று இவரும் எண்ணினார். பெரியபுராணத்தை இசைப்பாட்டாகப் பாடித் திருவாவடுதுறை ஆதீனத்திற்குக் கொண்டுபோய் அம்பலவாண தேசிகர், சுப்பிரமணிய தேசிகர், பெரும் புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் முதலிய பெரியோர் களின் முன்பு அரங்கேற்றினார். இவரும் இவருடைய இளவலாகிய மகாவைத்தியநாதையரும் இசையோடு பாடியதைக் கேட்டு அவையினர் யாவரும் மன மகிழ்ந்து உள்ளம் உருகினார்கள். பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை யவர்கள்,

"நாடுவா னவர்முனிவர் தொழுதேத்த
ஆனந்த நடன மன்றுள்
ஆடுவான் அடியெடுத்துக் கொடுப்பவுயர்
சேக்கிழார் அருளிச் செய்த
பாடுவான் புராணத்தை எழுதுவார்
வாயாரப் படிப்பார் இன்பம்
நீடுவான் சிந்திப்பா ராணர்கள்
ஆனாலும் நிலத்து வாழ்வார்." (க)

"அடியெடுத்துக் கொடுத்தவன்போல் தண்ணுமையா
திகள்தழுவி அளவா இன்பம்
படியெடுத்துக் கொளப்புரியா விதமுணர்ந்தாங்
கதினுளநாற் பதமுங் கண்டோர்
கொடியெடுத்த நிறத்தவன்வாழ் பதமுதற்பல்
பதங்கடத்து குணரும் வேட்கக்
கடியெடுத்து வீசுபல பதஞ்செய்தான்
அனையவன்யார் கரைவாய் என்னின்." (உ)

“பொன்னிவளந் தருநாடு புரிதவத்தால்
வையையெனும் புரிதோன் றிற்று
மின்னியது செய்தவத்தால் பஞ்சநத
மாமறையோன் விருப்பின் வந்தான்
மன்னியவன் புரிதவத்தால் மறைநான்கும்
எனவுதித்த மைந்தர் தம்முள்
பன்னியது தன்னதெனத் தன்னியல்பின்
உணருமொரு பான்மை மேயோன்.” (௩)

“சாம்பமூர்த் திக்கிளையான் என்பதலால்
இளையான்எத் தமிழ்வல் லோர்க்கும்
மேம்படுமா வயித்தியநா தனுக்குமூத்
தானென்று விளம்பல் போல
ஆம்பலவாம் இசையினுமூத் தானொழுக்கம்
பலதிரண்டால் அன்ன மெய்யான்
ஓம்பல்புரி இராமசா மிச்சுகுண
மாமறைதேர் உயர்ச்சி யோனே. (௪)

“ஓங்குபுகழ் இராமசா மிச்சுகுண
மறையவன்பாட் டுவந்தான் வாமம்
தாங்குகற்றோ கையுமருட்செய் பிரமணிய
குருவெனுஞ் சேய் தானு மேவ
வீங்குதுறை சையினூ மெய்கண்டான்
சந்தானம் விளங்க மேயோன்
பாங்குபுனை பேரருளம் பலவாண
தேசிகன்எம் பரமன் தானே.” (௫)

என்னும் ஐந்து பாடல்கள் சிறப்புப் பாயிரம் வழங்கினர்.

பார்வதி வரலாற்று இசைப்பாட்டு

திருவாவடுதுறை ஆதீனத்தலைவர் விருப்பப்படி, மகா வைத்தியநாதையர் திருவிடை மருதூர் திருக்கோயிலில் பார்வதி திருமண வரலாற்றைக் கதையாக நடத்தினர். பிறகு ஆதீனத் தலைவருடைய விருப்பப்படி இவர் அதனை இசை நூலாகப் பாடி முடித்தார்.

இரங்கற் பாக்கள்

இவருடைய இளவலாகிய மகாவைத்தியநாதையர் தாம் தம் தமையனுரைவிட இசையிற் சிறந்த சீர்த்தி பெற்றிருந்தும் தமையனுராகிய இவரிடம் அன்பாகவும் பணிவாகவும் இவருடைய குறிப்பறிந்தும் நடந்து வந்தார். இசையரங்கைப் பொறுத்த எல்லாவகையான ஏற்பாடுகளையும் இவரே நடத்தினர். கிடைக்கிற நன்கொடைப் பொருளை யெல்லாம் அவர் இவரிடமே கொடுத்துவிடுவார். 1893-ஆம் ஆண்டில் மகாவைத்தியநாதையர் காலமானபோது இவர் பெரிதும் வருந்தினர். பல இரங்கற்பாக்களைப் பாடினர்.

"கானநூற் கற்பகமே! அறுபத்து
மூவர்முதற் கடவுட் காதை
ஆனசீர் வளந்தருசிந் தாமணியே!
அமுதடியார்க் களிக்குங் காம
தேனுவே! எனக்கிளைய சிங்கமே!
என்னுயிரே! சிவமெய்ஞ் ஞான
பானுவே! கலைக்கடலே! உனைப்பிரிந்திங்
காற்றகிலேன் பாவி யேனே. (க)

உயிர்இழந்த காத்திரம்போல் ஒளிஇழந்த
நேத்திரம்போல் உயர்செஞ் சாலிப்
பயிரிழந்த பண்ணையைப்போல் மதியிழந்த
மங்கையைப் போல் படர்கொள் கொம்பின்
இயலிழந்த இளங்கொடிபோல் இறகிழந்த
பறவையைப்போல் இறைவன் காக்கும்
செயலிழந்த குடிகளைப்போல் உனையிழந்திங்
கிடர்உழந்தேன் தீமை யேனே." (உ)

என்பன அவற்றுள் இரண்டு பாடல்கள். பெரும்புலவர் மீனட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் காலமான செய்தியை அறிந்தவுடன் இவர்,

"கும்பனெனில் அன்னேன் குறியவனும் வானுலகில்
கம்பனெனில் அன்னேனுங் கம்பனும்—அம்புவியில்
வேறுளார் வேறுளராம் மீனாட்சி சுந்தரநின்
கூறெவரென் றேயகன்ருய் கூறு."

"எனைவைத்தி எனைவைத்தி எனப்பதங்கள்
இடையிடைநின் றிரந்து வேண்ட
இனிவைப்பாம் இனிவைப்பாம் பொறுத்திடுமின்
பொறுத்திடுமின் என்று கூறி
நினைவுற்ற ஒருகடிகைக் களவில் கவித்
தொடைதொடுத்து நிமலர் பூணப்
புனைவுற்ற மீனாட்சி சுந்தரவள்
ளலைப்போல்வார் புவியில் யாரே."

என்னும் பாடல்களைப் பாடி உள்ளம் வருந்தினார்.

இறுதி

மகாவைத்தியநாதையருக்குப் பின்னுஞ் சில காலம் இவர் வாழ்ந்திருந்து இறைவன் திருவடி நீழலை யடைந்தார்.

இயற்றிய நூல்கள்

1. திருச்செந்தில் சந்த விருத்தம்
2. திருச்செந்தில் யமக வந்தாதி
3. பெரிய புராணக் கீர்த்தனை
4. பார்வதி சரித்திரக் கீர்த்தனை.

முதலியன இவரியற்றிய நூல்கள்.

---

## ௫௫. தேவிபட்டினம் முத்துச்சாமிப் பிள்ளை

### தோற்றம்

பாண்டிநாட்டில் தேவிபட்டினம் என்னும் ஊரில் முத்துச்சாமிப் பிள்ளை பிறந்தார். கல்வியை வரன் முறையாகக் கற்றுச் சிறந்த புலமையடைந்தார். அவதானங்கள் செய்வதிலும் வல்லவர் என்றும், அவதானங்களை எண்ணிக்கை யில்லாமற் செய்தபடியினால் "கணக்கிலவதானி" என்றும் (கணக்குகளை விரைந்து பலரும் வியக்குமாறு போட்டுக் காட்டியபடியினால் என்றுங் கூறுவர்) பெயர் பெற்றுச் சிறந்து விளங்கினார். திருவருட்பிரகாச வள்ளலார் என்னும் இராமலிங்க அடிகள் பெரும்புலவர் மீனாட்சி சுந்தரம்பிள்ளை ஆகியவர்களுடைய காலத்தில் வாழ்ந்திருந்தவர்.

### வாழ்க்கை

இவர் சிவப்பதிகள் தோறும் இறை வழிபாட்டிற்காகச் செல்லுவதையும் செல்லுமிடங்களி லெல்லாம் ஒவ்வொரு வெண்பாப் பாடுவதையும் வழக்கமாகக் கொண்டிருந்தார். அவ் வெண்பாக்கள் பதியின் பெயரையாவது இறைவன் பெயரையாவது கொண்டு, திரிபிலேனும் யமகத்திலேனும் அமைந்து சிறப்புடன் விளங்குவனவாம்.

" திருப்பனந்தாள் முக்கட் சிவக்கனியே நின்பால்
விருப்பனந்தாள் போற்றமுத வித்தே—நெருப்பனந்தாள்
செங்கைகளங் காதின்னே தீனவிருட் காதின்னே
சங்கைகளங் காதிமுத்தி தா.

வீழி மிழலையுறை வேதியனே முன்னொருமன்
வீழி மிழலை மின்றோய் வேணியனே—வீழியின்முன்
மாத்திரையொன் றற்றமலர் மால்புனைதாட் பூபதியென்
மாத்திரைதந் தென்மவநோய் மாற்று."

என்பன அத்தகைய வெண்பாக்களுள் இரண்டாம். இவ்வாறு இவரால் இயற்றப்பெற்ற தனிப்பாடல்கள் பல. அவற்றுள் ஒரு சில பாடல்களைத் தவிர மற்றவை மறைந்து போயின.

பெரும் புலவரைக் காண்டல்

முத்துச்சாமிப் பிள்ளை கும்பகோணத்திற்கு அண்மையில் உள்ள பட்டீச்சுரம் என்னும் ஊரில் அந்நாளில் சிறந்து விளங்கிய நமச்சிவாயபிள்ளை என்னும் செல்வரால் ஆதரிக்கப்பெற்று அங்கு நீண்டகாலம் தங்கியிருந்தார். அந்நாளில் இளைஞராக விளங்கிய மீனாட்சிசுந்தரம் பிள்ளை பட்டீச்சுரஞ் சென்றார். முத்துச்சாமிப் பிள்ளை மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களுடைய கல்வியாற்றல், செய்யுளியற்றுந்திறன், அடக்கம், பொறுமை முதலிய அரிய குணங்களைக் கண்டு வியந்தார். சிலநாள் அவரோடு அளவளாவியிருந்தார்.

இராமலிங்க அடிகள் தொடர்பு

முத்துச்சாமிப் பிள்ளை ஒருநாள் மதுரை மடம் ஒன்றில் திருச்சிற்றம்பல ஞானியார் என்னும் பெரியார் ஒருவரோடு உரையாடிக்கொண்டிருந்தார். அப்போது திருவருட்பிரகாச வள்ளலார் இராமலிங்க அடிகளிடம் இருந்து மேற்படி திருச்சிற்றம்பல ஞானியார்க்கு ஒரு கடிதம் அஞ்சல்வழியாக வந்தது. ஞானியார் அக்கடிதத்தைப் படித்துப் பார்த்துவிட்டு, முத்துச்சாமிப் பிள்ளையிடங் காட்டினார். அக்கடிதம் பொதுவான முறையில் அமைந்திருந்தது. அதனைப் படித்துப்பார்த்த முத்துச்சாமிப் பிள்ளை, "பெரிய மேதாவியான இராமலிங்க அடிகளார் எழுதிய கடிதத்தில் இலக்கண இலக்கியச் சிறப்பு ஒன்றும் இல்லையே" என்று பதற்றமாகக் கூறினார். இதனைக் கேட்ட திருச்சிற்றம்பல ஞானியார், "வள்ளலார் உரையாடும்போது சிந்துகிற இலக்கணந்தான்

இந்த உலகில் பரவியிருக்கின்றது," என்று கூறினர். இதனைக் கேட்ட முத்துச்சாமிப் பிள்ளை, "அவ்வாறாயின் இலக்கணச் செறிவு பொருந்திய கடிதம் ஒன்றை அவர்களிடமிருந்து வரவழையுங்கள் பார்ப்போம்," என்று கூறினர்.

ஞானியார் இலக்கணச் செறிவுள்ள கடிதம் ஒன்று எழுதியனுப்ப வேண்டுமென்று தமது நோக்கத்தை வள்ளலாருக்குத் தெரிவித்துக் கடிதம் ஒன்று எழுதினர். கடிதத்தைப் பார்த்த வள்ளலார், தமது வழக்கப்படி, "பிச்சு" என்று கூறி அக்கடிதத்தைப் போட்டுவிட்டனர். அங்கிருந்தவர்கள் அக்கடிதத்தை எடுத்துப் பார்த்துவிட்டுத் தொழுவூர் வேலாயுத முதலியாரிடங் கொடுத்துத், "திருச்சிற்றம்பல ஞானியார் விருப்பப்படி இலக்கணக் கடிதம் ஒன்று எழுதவேண்டும்," என்று வேண்டிக்கொண்டனர். உடனே தொழுவூர் முதலியார் கடிதம் எழுதலானர்.

**இலக்கணக் கடிதம்**

அருட்பெருஞ்சோதி தனிப்பெருங் கருணை இலக்கண வியனடை வழக்கப்பாடுறுத்துவிக்கும் பத்திரிகை

உணர்ந்தோரானியல் வகையவின்ன வென்றவற்றிற் பின்மொழி மதிக்கு முன்மொழி மறைக்கு முதலீறு விளங்க முடிப்பதாய பின்மொழியடைசார் முன்மொழி ஞாங்கர் விளங்கிய ஞானிகட்கு.

பொய்யற்கெதிர்சார் புற்றமூலியொன்று வளைத்து வணக்கஞ் செய்த ககன நீரெழிலென்றும் வான் வழங்கு பண்ணிகாரமென்றும் நாகச்சுட்டு மீனென்றும் வேறுகுறிப்பதொன்று.

அண்மைச் சுட் டடுத்த வேழாவதன் பொருண் மையும்மையடுத்த பல்லோர் வினைப் - பெயர்ப்பொருள் குறிஞ்சியிறைச்சிப் பொருளொன்றனோ புணர்ப.

சேய்மைச் சுட்டடுத்த வத்திறத்தியல்யாது. இரண்டனுருபொடு புணர்ந்த தன்மைப் பன்மை யாறுவதன் பொருட்டாக்கினார்க்குய்த்த கற்பியலதி கரிப்பின் வருந்தலைமகட் பெயரவிரண்டனோ டிரண்டி ரண்டுகேக்கழிவிலேப் பெயரவு மாகார வீற்று முதனிலைத் தனிவினைச் செயவென் வாய்ப்பாட்டு வினையெச் சத்தனவாகக் கலம்பகச் செய்யு ளூறுப்பாற் சிறத்தும்.

இருவகை முதற்பொரு ளொன்றன் பாகுபாட் டுறுப்பிற் குறித்தவைம்பெரும் பூதத்தோர் விசே டணத் தெதிர்மறை நடுக்குறை யியற்சொற்பெயர வுயிர்ப்பெயராக வெதிர் காலங் குறித்து நின்றது.

சில வினைச்சார்பான் விலங்கு சூடியவரைவில் வெளியாம். இதனோடீரிரு வகைப்பட்ட வோர்சார் புது நிலஞ் செலவுய்த்தனம். வேண்டுழி வேண்டியாங் குய்க்க. மற்றைய பின்னர் வரைதும். இற்றே விசும் பிற் கணைச்சலம்.

| | |
|---|---|
| பார்வதிபுரம்<br>சுக்கில-ளூ<br>துலா ரவி உஎஉ | இங்ஙனம்<br>நங்கோச்சோழன் வீரமணிச்<br>சூடியார் திருவாணைப்படிக்கு அடிமை<br>தொழுவூர் — வேலாயுதம். |

இவ்வாறெழுதப்பட்ட கடிதம் திருச்சிற்றம்பல ஞானி யார்க்கு அனுப்பப்பட்டது. ஞானியார் படித்துப் பார்த்து விட்டு முத்துச்சாமிப்பிள்ளையிடங் கொடுத்தனர். பெரும் புலவராக விளங்கிய முத்துச்சாமிப்பிள்ளைக்கே பொருள்

தெளிவாக விளங்கவில்லை. அவர் ஞானியாரைப் பார்த்து, "வேண்டுமென்று ஓர் அறிஞர் பூட்டுப் போட்டால் அந்த அறிஞர் தாம் திறக்கவேண்டும்," என்றார். இதனைக் கேட்ட, ஞானியார், "அவ்வாறாயின் நீவிர் ஒரு பூட்டுப் போடும்," என்றனர். உடனே முத்துச்சாமிப்பிள்ளை,

"தகரவரிக் கூந்தலர்கா மாதிமுந்நீர் தாழும்
தரவரி நாலைந்து சாடும்—தகரவரி
மூவொற்றி யூர்பொருளை மூன்றுமங்கை யேந்துமொரு
சேவொற்றி யூரானைச் செப்பு"

என்று ஒரு செய்யுளை இயற்றினார். ஞானியார் இராம லிங்க அடிகட்கு அனுப்பினர். அதற்கு அடிகள் பின்வருமாறு உரையெழுதியனுப்பினார்.

தகரவரி - மைச்சாந்தணிந்த, கூந்தலர் - மயிரையுடைய பெண்கள், காமாதி முந்நீர் - காமம் வெகுளி மயக்கம் என்னும் முக்குணத்தில் மூழ்கும்படியான, தகவரி நாலைந்து - 'த' என்னும் எழுத்து வரிசையில் நான்காவது ஐந்தாவது எழுத்துக்களை (தீ, து) சாடும் - ஒழிக்கும், தகரவரி மூவொற்று - த், க், ர், இ - இகர எழுத்து, ஊர் பொருளை மூன்றும் - சேர்ந்தபொருள் மூன்றும் திகிரி, த்+இ, க்+இ, ர்+இ, தி, கி, ரி, இந்த திகிரி என்னும் சொற்குப் பொருள் மூன்று; திகிரி - மலை, சக்கரம், மூங்கில் - ஈண்டுமலை கோவர்த்தன கிரியைத் தாங்கினது, சக்கரம் - கையில் ஏந்தியுள்ளது, மூங்கில் - புல்லாங்குழல், ஆகிய இம்மூன்றையும். அம்கை ஏந்தும் - அழகிய கையில் ஏந்தும், ஒரு - ஒப்பற்ற. சே - (திருமாலாகிய) காளையை உடைய, ஒற்றியூரானை - திருவொற்றியூர்க் கடவுளை, செப்பு - போற்று. (திருவொற்றியூரனைப் போற்றினால் காமம், வெகுளி மயக்கம் நீங்கும்.)

இவ்வுரையால் முத்துச்சாமிப் பிள்ளையின் கருத்தை அடிகளார் வெளிப்படுத்தியதுடன் முத்துச்சாமிப் பிள்ளைக்கு விளங்காத மற்றுமொரு சிறப்புரையையும் எழுதி யனுப்பினுர்.

வள்ளலார் உரையைக் கண்ட முத்துச்சாமிப்பிள்ளை மிகுந்த வியப்படைந்தார். உடனே புறப்பட்டு அடிகள் எழுந்தளியிருந்த ஊருக்குச் சென்ருர். வள்ளலார் எழுந்தருளிய தெருவின் கோடியில் வண்டியை விட்டு இறங்கினுர். தெருவில் வெயிலில் விழுந்து திக்கு நோக்கி வணங்கிக்கொண்டே வந்து வள்ளலார் திருமுன் வீழ்ந்து மூர்ச்சையானுர். வள்ளலார் அவருக்குச் செய்யவேண்டியவைகளைச் செய்யச் செய்து உளந் தெளிவடையச் செய்தார். முத்துச்சாமிப் பிள்ளை அடிகளாரைப் பார்த்து, வணங்கி, "எனது குற்றத்தைப் பொறுத்தருளவேண்டும். தங்களை ஒரு புலவர் என்று எண்ணிவிட்டேன். தாங்கள் ஒரு பெரிய மெய்ஞ்ஞானியென்பது பிறகுதான் விளங்கிற்று" என்று கூறி அடிகளாரின் தொண்டர்களில் ஒருவரானுர்.

**இறுதி**

இவர் காலமான ஆண்டு திங்கள் நாள் முதலியன விளக்கமாகவில்லை. இவர் செய்த நூல்கள் சில பதிப்பாகாமலே மறைந்துபோனதாகத் தெரிகிறது.

---

## ௩௪. கருப்பையாப்பாவலர்

### தோற்றம்

மதுரைமாவட்டத்தைச் சேர்ந்த மேலூர்த்தாலுகா கொட்டாம்பட்டியிலே, 1864-ஆம் ஆண்டு வைகாசித் திங்கள் ஒன்பதாம்நாள் பிறந்தார் கருப்பையாப்பாவலர். இவருடைய தந்தையார் பெயர் மருதக்கொத்தனர். இவர் தோன்றிய குலம் யாதவர் குலம்.

### கல்வி

இவர் பள்ளிக்கல்வியைப் பாங்குறக்கற்று முடித்தபின் அறிஞர் சிலரை அடுத்துப் புலமைக்கல்வியைக் கற்றுச் செய்யுள் பாடுந் திறமடைந்தார். செல்வர்கள்மீது செய்யுட்கள் பல பாடினர்.

### முறையூர் சண்முகம் செட்டியார்

அந்நாளிலே முறையூரிலே சி. சண்முகம் செட்டியார் என்பவர் சிறந்த வள்ளலாக விளங்கியிருந்தார். செட்டியாரின் வள்ளன்மையை உணர்ந்த இவர் அவர்மீது பாக்கள் பல இயற்றிக்கொண்டு போய்ப் பார்த்தார். செட்டியார் பாவலரை வரவேற்றுப் போற்றினர். தம்மிடமே தங்கியிருக்குமாறு பணித்தார். பாவலரும் அவ்வாறே செட்டியாரோடு தங்கிச் செட்டியார் முன் நூல்கள் பலவற்றைப் படித்துணர்த்தினர். பல இடங்கட்குஞ் சென்று தமது புலமையைப் புலப்படுத்தி நன்கொடைகள் பெற்றார்.

### குன்றக்குடியில்

பாவலர் முருகப்பெருமானைப் போற்றி வழிபடுவதற்குக் குன்றக்குடிக்குச் சென்றார். அப்போது,

"குன்றக் குடியாய் குமரா குகாஎன்னைக்
குன்றக் குடியாயாட் கொண்டருள்வாய்—அன்றுவந்து

மன்றாடி னார்க்கு வருகுருவே யானுநின்பால்
மன்றாடி னேன்கைவிடா மல்."

என்னும் வெண்பாவைப் பாடினார்.

திருப்பரங்குன்றத்தில்

திருப்பரங்குன்றத்திற்கு முருகனை வழிபடச் சென்றிருந்தபோது தம் நண்பர் ஒருவர் அங்கு பாற்காவடி செலுத்துதலைப் பார்த்து,

"விண்ணப்பாற் காவடியான் வேண்டும் பரங்கிரியாய்
வண்ணப்பாற் காவடியான் வாழ்த்துநர்கள்—எண்ணப்பாற்
காவடிவாய்ப் பக்கங் கனிந்துதுணை யாநின்றுன்
சேவடிவாய்ப் பக்கருணை செய்."

என்றொரு வெண்பாப் பாடினார்.* மற்றும் பல இடங்கட்குச் சென்று சமயத்திற்குத் தக்கவாறு பல செய்யுட்கள் பாடினார். இவர் சென்னைக்குச் சென்றிருந்தபோது அங்குத் திருமயிலையில் செந்தில்வேலுமுதலியார் என்பவர் சிறந்த செல்வராகவும் கொடையாளியாகவுமிருந்தார். அவர்மீது பன்னிரண்டு ஊர்களின் பெயரை அமைத்து,

" திருமயிலை வான்மியூர் முகிலையன சாயல்
திகழ்கோதைத் திருவல்லிக் கேணிலைமை யுற்ற
ஒருமுல்லை வாயினகை யாலங்காட் டுவிழி
ஒற்றியூர் வதவசமோ எனநொந்துன் மயலால்
வருமணிமே கலைக்காஞ்சித் துகில்வளைகள் நழுவ
மலைத்தண்ணு மலைமுலைபின் வார்கிழிய வந்தாள்
தருமதுரை யேசெந்தில் வேலரசே யன்னாள்
தனைப்புலியூ ருக்கனுப்பில் சார்பாக்கம் உனதே."

என்னுஞ் செய்யுளைப் பாடினார். இதில், 1 திருமயிலை, 2 திருவான்மியூர், 3 திருவல்லிக்கேணி, 4 திருமுல்லை

* சென்னையில்.

வாசல், 5 திருவாலங்காடு, 6 திருவொற்றியூர், 7 காஞ்சி புரம், 8 திருவண்ணுமலை, 9 மதுரை, 10 செந்தூர், 11 புலியூர், 12 பாக்கம் என்னும் பன்னிரண்டு ஊர்ப் பெயர்கள் அமைந்துள்ளன. மேலும், தேங்குழல், அப்பம், தோசை, வடை, பணியாரம், லட்டு, பாயசம், பூந்தி, அதிரசம், பிட்டு, பாலாடை, முறுக்கு என்னும் பன்னிரண்டு பலகாரப் பெயர்களை யமைத்து,

"தேங்குழலப் பந்தோசை யித்தியமா வுடலில்
திகழ்வடையப் பழம்பணியா ரங்களெலாம் நீத்தே
ஓங்கியழு தலட்டுபல காரமுள வனமார்க்
கொடுங்கிப்பா யசநிகர்த்த உற்றூர்க்கும் அஞ்சி
வீங்கியக்கோ டாமுலையில் பூந்தினவு கொண்டுன்
விரகத்தில் அதிரசமுற் றன்பிட்டு வந்தாள்
தாங்குதல்நின் கடன்செந்தில் வேலரசே அவள்நின்
தன்பாலா யடைதலெழில் தருமுறுக்குத் தானே."

என்னும் பாடலைப் பாடினர். மற்றும், வேலமரம், ஆலமரம், அரசமரம், அத்திமரம், கோங்குமரம், பாலைமரம், வேப்பமரம் என்னும் ஏழு மரப்பெயர்களை அமைத்து,

"செந்தில்வேல் வள்ளால்நின் திண்புயத்தார் பற்றிறநித்தம்
வந்தில்வேண் டுஞ்சீர் வனப்புடைய—வந்தமில்வேல்
ஆலமரங் கண்ணரசா மல்குலத்திக் கோங்குமுலை
பாலைவேம் பென்றுண்ணுள் பார்."

என்னும் வெண்பாவைப் பாடினர். சென்னையில் க. வ. திருவேங்கட நாயுடு என்பவர் சிறந்த புலவராக விளங்கியிருந்தார். அவர் ஒருநாள் அருமையான சொற்பொழிவு ஒன்று செய்தார். அதனைக் கேட்டு மகிழ்ந்த இவர்,

"திருவேங் கடநா யுடவர்கள் செய்து
வரும்பிரசங் கத்தை மகிழ்ந்தே—வருங்கேட்கில்

அன்பும் அருளுங்கொண் டாநந்த மாப்பக
வன்பதத்தைச் சார்ந்துவாழ் வார்.”

என்னும் உரைநடை வெண்பாவைக் கூறினர். இதனை வெண்பாவாகவும் பாடலாம்: உரைநடையாகவும் படிக்கலாம்.

அண்ணுமலைச் செட்டியார்மீது பாடல்

சக்கந்தி என்னும் ஊரில் இருந்த அண்ணுமலைச் செட்டியார் என்பவர் பாவலருக்கு இனிய நண்பராக அமைந்திருந்தார். அவர் ஒருநாள் பாவலரைப் பார்த்துப், “பரிசின்பொருட்டுத் தாங்கள் எல்லோருக்கும் பாடல்கள் இயற்றிக்கொண்டு செல்கின்றீர்களோ? பொருளின் பொருட்டுத் தமிழின் அருமையறியாதவர்களுடைய பேரிலெல்லாம் பாடல்கள் பாடலாமா?” என்று உசாவினர். உடனே பாவலர்,

“செந்தமிழின் அருமையறி யாதவர்பால்
கவிகளொன் றுஞ் செப்போ மன்னர்
தந்தபரி சவையெனினுந் தக்கதென
வேமதிக்கோம் தரணி மீது
சந்ததமும் எமக்குரிய தகமைகண்டாய்
நினதருமை தருநண் புக்கே
வந்தனமண் ணுமலையாம் வணிகர்குல
மணியேநீ வாழ்க மாதோ.”

என்னும் பாடலால் மறுமொழி கூறினர்.

திருமண வாழ்த்து

சண்முகம் செட்டியாருக்குத் திருமணம் பெருஞ் சிறப்பாக நடைபெற்றது. அதனைச் சிறப்பித்துப் பாவலர் பல திருமணவாழ்த்துப் பாக்கள் பாடி வாழ்த்தினர் அவற்றுள்,

"இத்தனை மகத்வ மணவிழாக் காட்சி
இன்பதை ஈந்தளம் இறையாம்
உத்தம மகிபற் குலகினில் தீர்க்கா
யுள்புகழ் கீர்த்திநற் செல்வம்
புத்திர பாக்யம் இவைகள்மேன் மேலும்
பொற்பொடு பெருகிட அருள்வான்
நத்தன்மான் மருகன் முருகனை யேத்தி
நாள்தொறும் பணிகுவம் நாமே."

என்பது இறுதிப் பாடலாகும்.

**தனிச்செய்யுட் சிந்தாமணி**

தனிப்பாடல் திரட்டுக்குப்பின் புலவர்களால் பாடப் பெற்றுள்ள பாடல்களையும் மற்றும் உள்ள தனிப்பாடல் களையும் ஒரே நூலாகத் திரட்டவேண்டும் என்னும் நோக்கம் சண்முகம் செட்டியாருக்குண்டாகியது. தமது நோக்கத்தைக் கருப்பையாப் பாவலரிடந் தெரிவித்தார். கருப்பையாப்பாவலர் தனிப்பாடல்திரட்டு ஒன்றிரண்டு பாகங்களையும் அவைகட்குப் பின் பாடப்பெற்ற பாடல் களையும் ஒன்றாகத் தொகுத்துத் 'தனிச் செய்யுட் சிந்தா மணி' என்னும் பெயருடன் ஒரு நூலாக வெளிப்படுத் தினர். இந்நூலே பிறகு மு. ரா. கந்தசாமிக் கவிராயரால் மேலும் பல பாடல்கள் சேர்க்கப்பெற்று 1908-ஆம் ஆண்டில் வெளிப்படுத்தப்பெற்றது.

**இறுதி**

தனிப்பாடல்களையன்றி நூல்கள் பலவும் இயற்றிய இவர் 1907-ஆம் ஆண்டில் தமது நாற்பத்துமூன்றும் அகவையில் இவ்வுலக வாழ்வைத் துறந்தார்.

**இவர் இயற்றிய நூல்கள்**

1. திருப்பரங்கிரிமாலை
2. அழகர்பதிகம்

3. நவரத்தினம்
4. திருப்போரூர் ஆண்டவர் திரிபந்தாதி
5. கட்டளைக்கலிப்பா
6. திருப்பல்லாண்டு
7. சிதம்பரசுவாமி கலாமாலை
8. வண்ணங்கள்
9. திருக்கோட்டியூர்த் திரிபந்தாதி
10. திருச்செந்தில் திரிபந்தாதி
11. ஓரெழுத்தந்தாதி
12. திருக்குரம்பைத் திரிபந்தாதி
13. இலக்குமியந்தாதி
14. திருமெய்யம் ஓரெழுத்தந்தாதி
15. மருதூர் நாகநாதர்மாலை
16. திருமயிலைக் கற்பகாம்பிகைமாலை
17. நாமகள் இரட்டைமணிமாலை
18. திருஞானசம்பந்தமாலை
19. வடமுல்லைவாயில் மாசிலாமணிமாலை
20. பராசக்திமாலை
21. திருக்கோட்டாற்றுக்கலம்பகம்
22. விக்டோரியாராணி சரித்திரம்
23. மயிலைச்செந்தில் வேல்முதலியார் ஐந்திணைக்கோவை
24. பதிகங்கள்
25. முறையூர் மீனாட்சிசுந்தரேசுரர் பிரபந்தத்திரட்டு

முதலியன.

---

## ௫௫. சவராயலு நாயகர்

### தோற்றம்

செ. சவராயலு நாயகர் என்பவர் புதுச்சேரியைச் சேர்ந்தவர் மீனாட்சிசுந்தரம்பிள்ளை காலத்திலே வாழ்ந்திருந்தவர். அந்நாளிற் புதுச்சேரியில் இருந்த ஒரு புலவரிடம் சில நூல்களைப் பாடங் கேட்டுச் செய்யுள் இயற்றுதற்கும் சொற்பொழிவுகள் செய்வதற்கும் ஓரளவு பயிற்சி பெற்றிருந்தார். மேலும் மேலும் கல்வி கற்றுச் சிறப்படைய விரும்பிய அவருக்குத் தக்கவாறு கல்வி போதிப்பதற்குத் தக்க அறிவாளிகள் அகப்படவில்லை. தகுந்த ஆசிரியரை அவர் தேடிக்கொண்டிருந்தார். அப்போது பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் புலமையைப்பற்றியும் பெருமையைப்பற்றியும் உணர்ந்தார். இவர் கிறித்துவ சமயத்தைச் சேர்ந்தவர். பிற சமயத்தைச் சேர்ந்த தமக்குப் பிள்ளையவர்கள் பாடஞ் சொல்லுவார்களோ மாட்டார்களோ என்று ஐயுற்றுச் சில திங்களைப் போக்கினர். பிறகு எவ்வகையேனும் பிள்ளையவர்களிடஞ் சென்று பாடங் கேட்க வேண்டும் என்று உறுதிசெய்தார்.

### தாசில்தார் உதவி

சவராயலு நாயகருக்குப் பழக்கமான தாசில்தார் ஒருவர் இருந்தார். அவருடைய பெயர் சஞ்சீவி நாயகர். தாம் பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் பாடங் கேட்பதற்கு உதவி செய்ய வேண்டுமென்று அத் தாசில்தாரிடம் வேண்டிக் கொண்டார்.

“ ஆர்கொள் புகழ் சேர்சிராப் பள்ளியின் மகத்துவ
அகத்திய னெனத் தோன்றிவந்
தவதரித் திட்டமீ னாட்சிசுந் தரகுருவை
அண்டிநற் றமிழை யோர்தற்
காயவழி காட்டவுனை அன்றிவே றிலையென்
றடுத்துளம் இரங்கு மென்றன்
அனுபவ மறிந்தெனக் காதரனை செய்யநின
தகங்கனிந் திடல் வேண்டுமே.”

என்னும் பெரிய செய்யுள் ஒன்றையும் இயற்றிப் பாடினர். சஞ்சீவி நாயகர் தக்கவர்களைக் கொண்டு பிள்ளையவர்களிடம் வேண்டச் செய்தார். பிள்ளையவர்களோ ,"எச்சமயத்தவ ராயினும் ஆகுக. தமிழ் நூல்களைக் கற்பிப்பதற்கு யாதொரு தடையும் இல்லை," என்று தமது உடன்பாட்டைத் தெரியப் படுத்தினர். சவராயலு நாயகர் தமது எண்ணங் கைகூடு மென்று மகிழ்ந்தார்.

### பிள்ளையவர்களை அடைதல்

சவராயலு நாயகர் படிக்க விரும்பிய அக்காலத்தில் பிள்ளையவர்கள் திரிசிரகிரியில் தங்கியிருந்தனர். தியாக ராயச் செட்டியார் முதலிய சிலரை உடன் கூட்டிக்கொண்டு சவராயலு நாயகர் பிள்ளையவர்களைப் போய்ப்பார்த்தார். தாம் வீரமாமுனிவரால் இயற்றப்பெற்ற தேம்பாவணி, திருக்காவலூர்க்கலம்பகம் முதலிய கிறித்துவ சமய நூல் களைப் படித்தற்கு விரும்பி யிருப்பதாகவும் அந் நூல்களைப் பாடஞ் சொல்லத் தக்க அறிஞர்கள் அகப்படவில்லை யென் றும் தெரியப்படுத்திக் கொண்டார். பிள்ளையவர்கள் நாயகர் அது வரையில் பாடங் கேட்டுத் தேர்ந்துள்ள நூல்களை உசாவியுணர்ந்தார். பிறகு சில கருவி நூல்களைப் பாடஞ் சொன்னர். அதன் பிறகு இவர் விரும்பிய தேம்பாவணி, திருக்காவலூர்க்கலம்பகம் முதலிய நூல்களைப் பாடஞ் சொன்னர். மற்றும் சில இலக்கண இலக்கியங்களையும் நன்கு போதித்தார். இதனல் சவராயலு நாயகருடைய புலமை சிறந்து விளங்குவதாயிற்று. இவ்வாறு இவர் பெரும் புலவர் பிள்ளையவர்களிடம் பாடங்கேட்ட பின்பு தமது சமயத்தாரிடத்தும் பிறரிடத்தும் சிறந்த நன்மதிப்பை அடைந்து உயர்ந்து விளங்கினர்.

*நன்றிமறப்பது நன்றன்று*

"நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல, தன்றே மறப்பது நன்று" என்று தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் கூறியிருக்கிறார். நம் இந்து சமயத்தவர்களில் எத்தனையோ பேர் "தெள்ளூற வித்தை கற்றால் சீடனும் குருவைத் தேடான்" என்பதற் கேற்பக் கல்வி கற்றுக்கொண்ட பிறகு தம் ஆசிரியரை அடியோடு மறந்துவிடுகிறார்கள். சவராயலு நாயகர் அவ்வாறு மறந்து செய்ந்நன்றி கொன்ற மகனாகவில்லை. பிள்ளையவர்களிடத்திலும் அவருடைய மாணவர்களிடத்திலும் பேரன்பு பாராட்டினார். மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களுடைய மகனுக்குத் திருமணம் நிகழ்ந்தபோது பெருந் தொகையைத் திருமணச் செலவுக்கு அனுப்பி வைத்தார். இவருடைய அன்புடைமையை எண்ணி உள்ளம் உருகிய பிள்ளையவர்கள் இவர்மீது 'சவராயலு நாயகர் மாலை' என்னும் நூல் ஒன்றையும் பாடிக் களிப்பித்தார்.

*சொற்பொழிவுக்கு முன்*

எங்கேனும் சொற்பொழிவு செய்தற்குச் சவராயலு நாயகர் சென்றாரெனின்,

"ஓதுதற் கருநூல் யாவையும் உணர்ந்த
உணர்வினன் திரிசிர கிரியாம்
மேதகு பதியில் ஒளிர்தரு ஞான
விளக்கமா யடியவர் உளத்தில்
தீதுறும் அவிச்சை யாமிருள் சீத்துத்
திகழுமென் தேசிக னுய
கோதின்மீ னாட்சி சுந்தரன் அருளால்
கூறுதும் இஃதுளந் துணிந்தே."

என்னுஞ் செய்யுளைப் பாடுவார். தேம்பாவணியை விரித்துரைத்துத் தேம்பாவணிச் சொற்பொழிவு செய்யத் தொடங்கினாலோ,

"விளங்குறுவெண் புகழ்வளைந்த மீனாட்சி சுந்தரப்பேர்க்
களங்கமில்தே சிகனென்பால் கருணைநனி புரிந்ததனால்
துளங்குறுதேம் பாவணிக்குச் சொலத்துணிந்தேன் உரைவிரித்து
வளங்கெழும்அவ் வருளிலையேல் வகுத்தலரி தரிதரிதே."

என்னுஞ் செய்யுளைக் கூறுவார். இவருடைய ஆசிரிய அன்பு எல்லோராலும் பாராட்டத்தக்க வகையில் அமைந்திருந்தது. ஆசிரியர் எச்சமயத்திலேனும் பொருள் நெருக்கடியால் தளர்ச்சியுறுகிறார் என்று அறிந்தால் தம்மால் இயன்ற உதவியைச் செய்யாமல் இரார். இவருடைய ஆசிரிய அன்பு இவரை நன்னிலையிற் சிறப்பாக வைத்திருந்தது.

"முத்திக்கு வித்தாம் முரிமனத்துக் காறுதலாம்
எத்திக் கினும்பொருளை யீவதுவாம்—சுத்தகலை
ஓது கருணைமிகும் உத்தமவென் சற்குருநிற்(கு)
ஏதுசெய்கு வன்கைம்மா றின்று."

"கற்றற் கெளியனவாக் காட்டியரும் பாடலெலாம்
பற்றச்செய் நற்குணவென் பண்ணவனும்—உத்தமனீ
ஞானப் பொருள்வழங்கி நற்றருமம் செய்வதுபோல்
தானமுண்டோ இவ்வுலகில் தான்."

"இலக்கண இலக்கியம் இனிதுற எவர்க்கும்
கலக்கம் அறப்புகல் கரிசில் குணாளன்
தன்னிடைக் கற்பவர் மன்னவைக் களத்துள்
என்னையும் ஒருவனாத் துன்னுவித் தருளி
மெய்யருள் சுரந்த மீனாட்சி சுந்தர
நல்லா சிரியன்........................"

என்னும் செய்யுட்களும் சவராயலு நாயகருடைய ஆசிரிய அன்பிற்கு எடுத்துக்காட்டாக அமைந்துள்ளன.

சிறப்புப் பாயிரம்

சென்னை திருமயிலையில் விநாயக முதலியார் அமைத்த ஓவிய அறச் சாலையைக் குறித்து மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள், "சித்திரச் சத்திரப் புகழ்ச்சி மாலை" என்னும்

நூலைப் பாடினார். அந் நூல் பலபேருடைய பாராட்டுப் பாக்களோடு பதிப்பிக்கப்பட்டது. அந் நூலைப் புகழ்ந்து சவராயலு நாயகர்,

"பார்புகழும் விநாயகவேள் திருமயிலைச்
சத்திரமாம் பாத்தி ரத்தில்,
ஏர்குடிகொண் டோங்கிவளர் மீனாட்சி
சுந்தரப்பே ரெங்க ளாசான்,
நார்நனிகொண் டமைத்துவைத்த நற்பாவாஞ்
செவியுணவை நயந்தே விண்ணோர்
சீர்தருதெய் வதவுணவை அவிஅவிஎன்
றேவெறுத்துச் செப்பு வாரால்."

என்பது முதலியப் பாடல்களைப் பாடினார்.

## இவர் இயற்றிய நூல்கள்

இவர் கிறித்துவ சமயத் தொடர்பான நூல்கள் சிலவற்றைப் பாடியுள்ளார். அந் நூல்களைப் புகழ்ந்து வேதநாயகம் பிள்ளை,

"சாதிநா யகனான சவராய லுத்தமனே
சவரி யாரென்
சோதிநா யகன்நாமம் நீதரித்தாய் மீனாட்சி
சுந்த ரப்பேர்
நீதிநா யகன் அன்றோ நினக்காசான் உலகமெலாம்
நியமித் தாளும்
ஆதிநா யகன் அனைமேல் நீபாடில் உன்கவியை
யார்மெச் சாரே."

என்பது முதலிய பாடல்களைப் பாடியுள்ளார்.

## இறுதி

மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் காலத்தவரான இவர் காலமான, பிறந்த ஆண்டுகள் முதலியன விளக்கமாக வில்லை.